# இந்த அன்பளிப்பு

# இவர்கள் போட்டோகிராபி கலையைத் தொடங்கத் தூண்டிவிடாதா!




## க்ளிக் III






CMAG-119- TAM

உங்கள் செல்வனுக்கும் செல்விக்கும் புகைப்படக்கலையை அறிமுகம் செய்து வையுங்கள். அவர்களுக்கு க்ளிக் III காமிரா வாங்கித்தாருங்கள். இந்தக் காமிராவால் படம் பிடிப்பது மிக மிக சுலபம். கணக்குகள் ஏதும் போட வேண்டாம்; குழம்பித் தவிக்கவும் வேண்டாம். நீங்கள் விரும்பும் காட்சியை ஃபோகஸ் செய்து, 'க்ளிக்' பண்ண வேண்டும். அவ்வளவுதான்! முதல் தடவையிலேயே படம் பிரமாதமாக விழுந்து விடும். ஒவ்வொரு ரோல் பிலிமிலும் சிறப்பாகப் பன்னிரண்டு படங்களை எடுத்து மகிழலாம்!

எனவே இந்த விழாக்காலத்தில் உங்கள் அருமைச் செல்வர்களுக்கு க்ளிக் III காமிராவை அன்பளிப்பாகத் தாருங்கள். இந்த அற்புத காமிரா போட்டோகிராபி தொடங்குவதற்கும், தொடர்ந்து படங்களை எடுப்பதற்கும் தலைசிறந்தது! அதிகாரம் பெற்ற எல்லா ஆக்பா வியாபாரிகளிடமும் கிடைக்கிறது.






ஆக்பா மேற்பார்வையின் கீழ் தயாரிப்போர்:
தி நியூ இந்தியா இண்டஸ்ட்ரீஸ் லிட்., பரோடா.

ஏகபோக விநியோகஸ்தர்கள்:
ஆக்பா-கேவார்ட் இந்தியா லிமிடெட் / பம்பாய் . புது டெல்லி
கல்கத்தா . சென்னை

சௌமிய, மார்கழி 13
1969, டிசம்பர் 28

# கல்கி
## பொருளடக்கம்





''கல்கி''யில் வெளியாகும் கதைகளில் உள்ள பெயர்கள் எல்லாம் கற்பனைப் பெயர்களே; சம்பவங்களும் கற்பனையே.

# ஓடாத சோஷலிஸக் குதிரைகளிடையே ஓட்டப் பந்தயம்








தமிழ்த்திருநாடு தன்னைப் பெற்ற
தாயென்று கும்பிடடி பாப்பா — பாரதியார்

மலர் 29 ✲ இதழ் 22



# தொட்டிலை ஆட்டிவிட்டுக் குழந்தையைக் கிள்ளு!

குழந்தையைக் கிள்ளிவிட்டுத் தொட்டிலையும் ஆட்டுவது என்ற பழமொழி நமக்கெல்லாம் தெரியும். ஆனால் நமது காங்கிரஸ் அரசாட்சி ஒரு புது மொழி சிருஷ்டித்திருக்கிறது! தொட்டிலை ஆட்டிவிட்டுக் குழந்தையைக் கிள்ளுவது என்பதுதான் அது.

ஸ்ரீ ஜே. ஆர். டி. டாட்டா சமீபத்தில் சென்னைக்கு வந்து ஸ்ரீ அனந்தராமகிருஷ்ணன் நினைவுச் சொற்பொழிவை நிகழ்த்தியதைக் கேட்டவர்கள் மனத்தில் மேற்படி எண்ணம்தான் ஏற்பட்டது.

நாட்டின் தொழில் வள முன்னேற்றத்துக்குத் தனியார்த் துறையினர் முக்கிய பங்கேற்க வேண்டும் என்று அரசாங்கம் எதிர்பார்க்கிறது. இன்னின்ன இனங்களில் இந்த அளவுக்குத் தொழில் வளம் பெருகத் தனியார்த் துறை பொறுப்பேற்கவேண்டும் என்று அரசாங்கம் திட்டம் வகுக்கிறது. பிறகு அந்த அளவுக்குத் தனியார்த் துறையினர் முன்னேற விடாமல் நூற்றுக் கணக்கான தடைகளையும் தடங்கல்களையும் ஏற்படுத்துகிறது.

தொட்டிலை ஆட்டிவிட்டுக் குழந்தையைக் கிள்ளுகிற கதைதானே?

தனியார்த் துறை என்றதுமே சந்தேகக் கண் கொண்டு பார்க்கிறார்கள். ஓரிரு சுயநல ஆசாமிகள் இருக்கலாம். அவர்கள் தவறுகள் இழைக்கலாம். ஆனால் அதற்காகத் தனியார்த் துறை முழுவதையுமே ஒரேவீச்சில் தாட்சண்யமின்றித் தூற்றுவதனால் ஒரு பலனும் விளையாது. உற்பத்தி தடைப்படுவதே மிச்சம் என்று கூறினார் டாட்டா.

தனியார்த் துறை என்றால் சுயநலமிகளின் கூட்டம் என்று ஒரு தவறான எண்ணம் அரசியல் நோக்கத்துடனே பரப்பப்படுகிறது. இக் கருத்து மேலும் உறுதிப்படுவதைத் தவிர்க்க தனியார்த் துறையினர் என்ன நடவடிக்கைகளை எடுக்கலாம் என்பதற்கு டாட்டா ஆக்கரீதியான யோசனைகளைச் சொன்னார். அதோடு பொதுத் துறையில் கவனிக்கப் படவேண்டிய ஒரு முக்கிய பணியைப் பற்றியும் குறிப்பிட்டார்,

பல்லாண்டுகளுக்கு முன் ராஜாஜி நாட்டின் பொருளாதாரத்தை ஊக்குவிக்கவும், வேலையில்லாத் திண்டாட்டத்தைப் போக்கவும், ரஸ்தா போடும் வேலையை அரசாங்கம் பெரிய அளவில் மேற்கொள்ளுவது நல்லது என்று ஒரு கருத்துத் தெரிவித்தார். இந்தக் கருத்தை ஸ்ரீ டாட்டா அவர்கள் வன்மையாக இப்போது ஆதரித்து விளக்கம் தந்து பேசியிருக்கிறார். அவர் கூறினார்:

"கிராமப்புறங்களில் பெருமளவில் ரஸ்தா போடும் வேலையை கிராமப் புனருத்தாரண திட்டத்தின் இன்றியமையாத அம்சமாக அரசாங்கங்கள் ஆக்கிக் கொள்வதால் உண்டாகும்

---

நாட்டின் வர்த்தகத் துறையில் தலையாய இடத்தில் உள்ள ஒருவருக்கு கௌரவப் பரிசு வழங்க மெட்ராஸ் மானேஜ்மெண்ட் அசோஸியேஷன் ஏற்பாடு செய்துள்ளது. இம் முறை இப் பரிசை ஜே. ஆர். டி. டாட்டாவுக்கு அளிப்பதென ஏகமனதாக முடிவாகி சமீபத்தில் சென்னையில் நடந்த மாநாட்டின்போது அதை திரு சிவசைலம் வழங்கினார்.





## புதிய ஷெரீப்

'மதிப்புக்குரிய தந்தையின் மதிப்புக்குரிய புதல்வர்' என்று ராஜாஜியால் பாராட்டப் பட்டிருக்கும் ஸ்ரீ ஏ. சிவசைலம் அவர்கள் சென்னையின் ஷெரீபாக நியமனம் பெற்றிருப்பதில் மட்டிலா மகிழ்ச்சி அடைகிறோம். தொழில் திறமைக்கும், யோக்கிய சீலத்துக்கும் உருவமாய் விளங்கிய ஸ்ரீ அனந்தராமகிருஷ்ணனின் உண்மையான வாரிசாக விளங்கி மகத்தான தொழிலகங்களைச் சீரிய முறையில் நிர்வகித்து வருகிறார் ஸ்ரீ சிவசைலம். அறிவிலும், ஆற்றலிலும், பண்பிலும் முதிர்ந்தவராக விளங்கும் இந்த இளைஞர் ஷெரீபாகப் பொறுப்பு ஏற்கும்போது நம் உளம் கனிந்த நல் வாழ்த்துக்களைத் தெரிவித்துக் கொள்கிறோம்.

---

பலன்கள் அளவற்றவை. சுமார் இருபது லட்சம் மக்களுக்கு வேலை கிடைக்கும். இதை ஆதாரமாகக் கொண்டு இதைச் சார்ந்த தொழில்களில் மேலும் இருபது லட்சம் மக்களுக்கு வேலைவாய்ப்பு ஏற்படும். நாட்டின் பொருளாதார வளத்தை இந்த வசதி மின்னல் வேகத்தில் பெருக்கும். பின்தங்கிய நாடுகளுக்கு, பின் தங்கிய மக்களுக்கு இதனுடைய நன்மை கண்கூடாகத் தெரியவரும். இதற்காக நாம் செய்ய வேண்டிய செலவு ஆண்டுக்கு இருநூற்றைம்பது கோடி ரூபாய். ஆனால் மோட்டார் வரிகள் மூலம் ஆண்டுக்கு அறுநூறு கோடி ரூபாய் வசூல் செய்கிறதே அரசாங்கம். இருநூற்றைம்பது கோடி — ஊதாரிச் செலவு அல்ல— உண்மையான, பயனளிக்கத்தக்கச் செலவைச் செய்யக் கூடாதா?''

மற்றொன்று, சமூகத்துக்குத் தொழில் வர்க்கம் ஆற்ற வேண்டிய பணி - தருமகர்த்தா மனோபாவம்—என்பதை உதாரணம் கொடுத்து விளக்கி வைத்திருக்கிறார் ஸ்ரீ டாட்டா. அவர் சொல்லுகிறார்:

''நல்ல காரியங்களுக்கு நன்கொடை அளிக்கப்படுகிறது. இது நல்லதே. ஆனால் இது போதாது. தங்களுடைய திறமை வாய்ந்த நிர்வாகத்தினர்களையும் தொழிலாளர்களையும் பண வசதியையும் அந்தந்த வட்டாரங்களில் ஆக்க வேலைகளுக்குப் பயன்படுத்தலாம். அநதப் பகுதி மககளின் வாழ்க்கை தங்களது வாழ்க்கை என்ற எண்ணத்துடன் இணைந்து செயல்பட வேண்டும். வீடில்லாதோர், வசதியற்ற உழவர்கள், சிறு வியாபாரிகள், வறுமையில் வாடும் வயோதிகர்கள், பாலர்கள் - இவர்கள் இல்லாத ஊர் எது? அவர்களுடைய நிலையை உயர்த்துவது தங்கள் பணி என்று சுற்றுப்புறங்களை அந்தந்த தொழிலகங்கள் ஸ்வீகாரம் எடுத்து வளர்க்க வேண்டும்.''

மகாத்மா காந்தியின் தருமகர்த்தா கொள்கைக்கு இதைவிட பிரத்தியட்ச நோக்கில் விளக்கம் வேண்டுமா? இதைத் தாமே அநுஷ்டித்துக் கொண்டு வருவதால், அநுபவ பூர்வமாக உளங்கனிந்து ஆலோசனை சொல்லியிருக்கிறார்.

தனியார்த் துறையினர் தாமாகவே முன் வந்து, எந்தவிதமான விருப்பு வெறுப்புக்களுக்கும் உள்ளாகாத அறிஞர்களைக் கொண்ட ஒரு சுதந்திர ஸ்தாபனத்தை ஏற்படுத்தி அதனிடம் தமது கணக்கு வழக்குகளைப் பரிசோதனைக்குத் தர உடன்பட வேண்டும். அந்த சுதந்திர ஸ்தாபனம் அளிக்கும் சான்றிதழ், குறிப்பிட்ட ஒரு கம்பெனி சமூக நலனையும் கருத்தில் கொண்டு தரமான முறையில் இயங்குகிறதா இல்லையா என்பதைச் சர்க்காருக்குத் தெளிவாக்கும். அந்த அடிப்படையில் சர்க்கார் பெர்மிட் லைசென்சுகளை வழங்கலாம் என்றார் டாட்டா.

பர்மிட் லைசென்சுகளை வழங்க விருப்பு வெறுப்பற்ற நிபுணர்களைக் கொண்ட ஒரு சுதந்திர அமைப்பு உருவாக்கப்பட வேண்டும் என்று ராஜாஜி சொல்லி வந்திருக்கிறார். சர்க்கார் அப்படிச் செய்யாது போனால் தனியார் துறையினர் என்ன செய்ய லாம் என்று மாற்று யோசனை கூறியிருக்கிறார் டாட்டா.

அடிப்படையில் பார்க்கப் போனால் மகாத்மா காந்தி அறிவுறுத்தியதும் ராஜாஜி வற்புறுத்தி வருவதுமான தர்மகர்த்தா முறைப்படி தனியார் துறையினர் நடந்து கொண்டால் எந்தவிதமான குற்றச்சாட்டுக்கும் இடம் இராது. அந்தவிதமாகத்தான் வடக்கே ஜம்ஷெட்ஜி டாட்டாவும் தெற்கே அனந்தராம கிருஷ்ணனும் செயலாற்றினார்கள். மாபெரும் தொழில் வர்த்தக சாம்ராஜ்யங்களை நிறுவினார்கள்.

நாட்டுப் பொருளாதாரம் வளருவதற்குப் பேருதவி புரியும் இநதத் தொழில் சாம்ராஜ்யங்களைச் சமூக விரோதிகளாகச் சித்திரித்துக் காட்டுவதிலேயே அரசாங்கம் முனைந்துள்ளது. வரிவிதிப்பாலும், கண்ட்ரோல்களாலும் தொழில் விஸ்தரிப்பை அரசு தடுக்கிறது; சோஷலிஸ கோஷத்தால் மக்களைத் தனியார் தொழில் விஸ்தரிப்பின் மீது துவேஷம் கொள்ளச் செய்கிறது.

அரசாங்கமும், தொழில் வர்க்கமும், மக்களும் ஒன்று கூடி உழைப்பதன் மூலம் தான் பொருளாதாரம் வளரும். ஒரு பகுதியை மற்றொரு பகுதி சந்தேகக் கண் கொண்டு பார்ப்பதால் அல்ல. பிடிவாதங்களாலும் அல்ல. இந்த உண்மையை டாட்டா வலியுறுத்தியுள்ளார்.

மேலே குறிப்பிட்டுள்ள சீரிய கருத்துக்களை எடுத்துச் சொல்ல ஸ்ரீ டாட்டாவுக்கு உரிமை உண்டு. அந்தஸ்து உண்டு. அநுபவம் உண்டு. நாட்டுப் பற்று உண்டு. தியாக உணர்வு உண்டு. ஆகவே அவருடைய கருத்துக்களுக்கு அரசு செவி சாய்க்க வேண்டும்.

# ராஜாஜியின் கருத்துக்கள்

ஆந்திரத்தில் குப்பத்தைச் சேர்ந்த ஒரு பியூன், மகாராஷ்டிரப் பள்ளி மாணவன் ஒருவன், தமிழ் நாட்டில் செங்கல்பட்டைச் சேர்ந்த ஓர் உழவர், ராஜஸ்தானத்திலுள்ள ஜெய்பூர் தபால் சேவகர் ஒருவர் — இவர்கள் லாட்டரிகளினால் லட்சாதிபதிகளாகியிருப்பதாகப் பிரகடனமாகியுள்ளது. திடீர் செல்வம் கிடைப்பது தர்ம நெறிகளின் சிதைவில் கொண்டு விடும். இந்த வாய்ப்புக்களைப் பயன்படுத்திக் கொண்டு சுய லாபம் அடைவதற்கு எத்தர்கள் காத்துக் கொண்டிருப்பார்கள்.

அது ஒருபுறமிருக்க, லாட்டரிகளினால் மக்களிடையே திடுமென உண்டாக்கப்படும் பெரும் ஏற்றத் தாழ்வுகள் சோஷலிஸ லட்சியத்துக்கு நேர் எதிர்த் துருவமாகும்.

பரிசு பெறத் தவறிய ஏராளமான மக்கள், சர்க்காரின் அங்கீகாரம் பெறாத சிறிய சூதாட்டங்களில் தங்கள் அதிர்ஷ்டத்தைப் பரீட்சிக்கத் தொடங்குவர். சர்க்கார் லாட்டரிகளைவிட இந்தச் சூதாட்டங்களில் வெற்றி வாய்ப்பு அதிகம்.

★

பழைய காங்கிரஸ் அகமதாபாத்திலும், இந்திரா காந்தியின புதிய காங்கிரஸ் பம்பாயிலும் தனித் தனியே மகாநாடு நடத்தியதில் ஒரு பொருளும் இல்லை. தனித் தனியே நடக்கும் கூட்டங்களில் தமது பலத்தைப் பரீட்சை பார்ப்பதற்கு மதிப்பு இல்லை. ஒவ்வொரு தரப்பும் தங்கள் பலத்தைப் பற்றிப் பாத்தியதைப் பாராட்டுவதோடு சரி. பிரதமராக உள்ள ஸ்ரீமதி இந்திரா காந்திக்குப் பெரிய கூட்டம் சேருகிறதா, ஆட்சி அதிகாரச் செல்வாக்கையும் ஜாஜ்வல்யத்தையும் எதிர்த்துப் போராடும் காங்கிரஸ் அக்கிராசனர் ஸ்ரீ நிஜலிங்கப்பாவுக்கு அதிகக் கூட்டம் சேருகிறதா என்பதல்ல பிரச்னை. அனைவரும் கூட்டாக அமர்ந்து விவாதித்து முடிவுக்கு வந்தால்தான் பொருளுண்டு. தனித் தனியே தலைகளை எண்ணுவதில் உபயோகமில்லை. யாருக்கு அதிகத் தெம்பு உள்ளது, யார் ஓய்ந்து போய் விழுந்து விடுகிறார்கள் என்று பார்ப்பதற்குப் பந்தயம் நடப்பதாகக் காண்கிறது. இதனிடையே பொதுவாக நிர்வாகம் சீர்குலைந்து வருகிறது. இதைக் கண்டு களிப்பவர்கள் கம்யூனிஸ்டுகள் மட்டுமே.

★

தேசத்தின் பல பாகங்களில் உழவுத் தொழிலாளர் பலவந்தமாக அறுவடை செய்து விளைச்சலை எடுத்துக் கொள்வதாகவும், இது போன்ற மற்ற பல குற்றங்கள் இழைக்கப்படுவதாகவும் செய்திகள் வருகின்றன. இது குறித்து அனைவரும் கவலை கொண்டுள்ளனர். ஆனால் இவ்விஷயத்தில் மிகவும் அக்கறை கொள்ள வேண்டிய பாரத உள் துறை அமைச்சர் சற்றும் கவலைப்படுவதாகத் தெரியவில்லை. இதற்குக் காரணம் எதுவாயிருந்தாலும் சரி, உள்துறை அமைச்சருக்கு உள்ள சிரமம் யாதாயினும் சரி அவரால் உரிய நடவடிக்கையில் ஈடுபட முடியவில்லை எனில், அவர் உள்துறைப் பொறுப்பை விட்டு விட்டு வீடு செல்ல வேண்டியதுதான். இந்தியாவில் சட்டத்தையும் ஒழுங்கையும் காக்க வேண்டியதன் அவசியத்தை உணர்ந்த ஒருவர் அவரது ஸ்தானத்தில் அமரவேண்டும்.

★

பெர்மிட் — லைசென்ஸ் நிர்வாகத்தைக் கட்சிப் பற்றற்ற சுதந்திரமான குழு ஒன்றிடம் ஒப்புவிக்க வேண்டும்; பொருளாதார விஷயங்களில் அரசாங்கம் இக்குழுவின் ஆலோசனைப்படி நடக்க வேண்டும்; இந்த ஆலோசனைகளை வெளிப்பட அறிவிக்கவும் வேண்டும் என்பது சுதந்திரக்கட்சியின் நெடுநாளைய கோரிக்கை. இதனைத் தற்போது எதிர்க்கட்சியிலுள்ள காங்கிரஸ் பிரிவும் ஆதரிப்பது மகிழ்ச்சிக்குரியது. எதிர்க்கட்சித் தலைவர் எவ்வளவு விரைவில் இயலுமோ அவ்வளவில் இது குறித்து ஓர் அரசாங்கச் சார்பற்ற தீர்மானம் கொண்டு வருவார் என்று நம்பப்படுகிறது. சர்க்கார் சர்வாதிகாரத்தை எதிர்த்து ஜனநாயகத்தில் பற்று வைத்துள்ள மற்ற எதிர்க்கட்சிகளின் துணையுடன் மேற்படி தீர்மானத்தைச் சர்க்கார் ஏற்குமாறு வற்புறுத்த முடியும் என நம்பலாம்.

---

தமிழ்நாட்டில் ஓர் அபரஞ்சித் தங்கமய ஆன்மாவாக வாழ்க்கையை நடத்திய 'ஸிஸ்டர்' சுப்புலக்ஷ்மி, தேவியின் மடியை வைகுண்ட ஏகாதசி திவ்விய திதியில் சேர்ந்துவிட்டார். ஸிஸ்டர் செய்து வந்த உபகாரத்தால் தமிழ் நாட்டில் துயரத்தில் வீழ்ந்த எத்தனையோ பெண்கள் புது வாழ்க்கையை அடைந்து, தெய்வத்தைப் புதுக் கண்களால் கண்டவர்கள் ஆனார்கள். குழந்தைப் பருவத்தில் விதவையாகிப் படித்து பல்லாண்டு கல்வி இலாகாவில் தொழில் செய்து வந்தார். அது பெரிதல்ல; எண்ணற்ற மக்கள் வீடுகளில் அவர் விளக்கேற்றி வைத்தது போற்றத்தக்கது. இந்த ஆன்மாவை விசுவதேவி தன் மடியில் ஏற்றி வைத்துக் கொண்டு விட்டாள்.

சக்கரவர்த்தி ராஜகோபாலாச்சாரி





# பொன்னியின் செல்வன்



அமரர் கல்கி

சோழ சாம்ராஜ்யத்தின் பட்டத்து இளவரசன் ஆதித்த கரிகாலன் காஞ்சிமாநகரில் பொன் மாளிகை கட்டினான். அதில் வந்து சிறிது காலம் தங்கியிருக்க வேண்டும் என்று கேட்டுக் கொண்டு தன் தந்தை சுந்தர சோழச் சக்கரவர்த்திக்கு ஓலை அனுப்பினான்.

ஓலை எடுத்துச் சென்றவன் வந்தியத்தேவன் என்னும் வீர வாலிபன். தஞ்சைக்குப் போகும் வழியில் அவன் ராஜ குடும்பத்துக்கு விரோதமாக நடந்து கொண்டிருந்த ஒரு பயங்கரச் சதியாலோசனையைப் பற்றித் தெரிந்து கொண்டான். அதிலிருந்து அவன் தூதனாக மட்டுமல்லாமல் ஒற்றனாகவும் மாறும்படி நேர்ந்தது.

சுந்தர சோழச் சக்கரவர்த்தி தஞ்சை அரண்மனையில் நோய்வாய்ப்பட்டுப் படுத்த படுக்கையாக இருந்தார். சதியாலோசனையில் முக்கியமாகச் சம்பந்தப்பட்டிருந்த பழுவேட்டரையர் சகோதரர்களின் பூரண ஆதிக்கத்தில் அவர் இருந்தார். தஞ்சைக் கோட்டைத் தலைவர் சின்னப் பழுவேட்டரையருடைய கட்டளையின்றிச் சக்கரவர்த்தியை யாரும் பார்க்க முடியாமலிருந்தது.

பெரிய பழுவேட்டரையர் முதுமைப் பருவத்தில் நந்தினி என்னும் அழகிற் சிறந்த இளம் பிராயத்து மோகனாங்கியை மணம் செய்து கொண்டிருந்தார். தற்செயலாகக் கோட்டைக்கு வெளியே அவளை வந்தியத் தேவன் சந்தித்தான். அவளுடைய உதவியினால் தஞ்சைக் கோட்டைக்குள்ளே பிரவேசித்துச் சக்கரவர்த்தியைக் கண்டு ஓலையையும் கொடுத்தான். ஆனால் சதியாலோசனையைப் பற்றி எச்சரிக்கை செய்ய முடியாமற் போயிற்று.

இதற்குள் சின்னப் பழுவேட்டரையர் அவன்மீது சந்தேகம் கொண்டார். அவருடைய ஆட்களிடமிருந்து தப்பித்துப் பொக்கிஷ நிலவறையின் மூலமாகச் சென்ற சுரங்க வழியாக வந்தியத் தேவன் வெளியே சென்றான். குடந்தைக்கு அருகிலிருந்த சோழ நாட்டின் பழைய தலைநகரான பழையாறையை அடைந்தான். அங்கே சுந்தர சோழச் சக்கரவர்த்தியின் செல்வக் குமாரியான இளையபிராட்டி குந்தவை தேவியைச் சந்தித்தான்.

குந்தவையின் தம்பியும் சக்கரவர்த்தியின் கடைசிப் புதல்வனுமான அருள்மொழி வர்மன் (பிற்காலத்து ராஜ ராஜன்) அப்போது ஈழ நாட்டுப் போரில் ஈடுபட்டிருந்தான். அவனை உடனே அழைத்து வரும்படி குந்தவை தேவி வந்தியத் தேவனை இலங்கைக்கு அனுப்பினாள்.

கோடிக்கரையில் கலங்கரை விளக்கின் காவலரின் மகள் பூங்குழலி என்பவள் இருந்தாள். அவளுடைய உதவியினால் வந்தியத் தேவன் கடல் கடந்து சென்று இலங்கையில் இளவரசர் அருள்மொழி வர்மரைச் சந்தித்தான். இலங்கைச் சிம்மாசனத்தை இளவரசர் தமக்கு உரிமையாக்கிக் கொள்ள விரும்புவதாகக் குற்றம் சாட்டி அவரைக் கைது செய்து வரும்படி பழுவேட்டரையர்கள் இரண்டு கப்பல்களையும் வீரர்களையும் அனுப்பியிருந்தார்கள். அதே சமயத்தில் ஆதித்த கரிகாலன் தன் தம்பியைக் காஞ்சிக்கு அழைத்து வரும்படி தன் நண்பன் பார்த்திபேந்திரனை அனுப்பியிருந்தான்.

பழுவேட்டரையர் அனுப்பியிருந்த வீரர்களில் பலர் இளவரசரைச் சிறைப்படுத்தும் முயற்சியில் கலந்து கொள்ள மறுத்து விட்டார்கள். மற்றவர்கள் அராபியக் குதிரை வர்த்தகர்கள் சிலரால் கொல்லப்பட்டார்கள். இளவரசர் பார்த்திபேந்திரனுடைய கப்பலில் ஏறிச் சென்றார். வழியில் பயங்கரமான சுழற் காற்றுத் தாக்கியது. வந்தியத் தேவனைக் காப்பாற்றுவதற்காக இளவரசர் கடலில் குதித்தார். இருவரும் முறிந்த பாய்மரம் ஒன்றின் உதவியினால் பூதத் தீவை அடைந்தார்கள். அங்கிருந்து பூங்குழலி அவர்களைக் கோடிக்கரை கொண்டு வந்து சேர்த்தாள்.

இளவரசருக்கு அதற்குள் கடுமையான நச்சுச் சுரம் வந்திருந்தது. குந்தவை தேவியிடமிருந்து சேந்தன் அமுதன் என்பவன் கோடிக்கரையில் வந்து காத்திருந்தான். இளவரசரை நாகைப்பட்டினம் சூடாமணி விகாரத்துக்குச் சென்று அங்கே சில காலம் இருக்கும்படி இளையபிராட்டி செய்தி அனுப்பியிருந்தாள். சேந்தன் அமுதனும் பூங்குழலியும் இளவரசரைக் கால்வாய் வழியாக நாகைப்பட்டினம் சூடாமணி விஹாரத்தில் கொண்டு போய்ச் சேர்த்தார்கள்.

கோடிக்கரைக்குப் பெரிய பழுவேட்டரையரும் பழுவூர் இளைய ராணியும் வந்திருந்தார்கள். இளவரசர் சிறைப்படுத்திக் கொண்டு வரப்படுவார் என்று அவர்கள் எதிர்பார்த்துக் கொண்டிருந்தார்கள். பார்த்திபேந்திரன் வந்து இளவரசர் கடும் சுழற் காற்றில் கடலில் குதித்து விட்டார் என்றும், திரும்பக் கப்பலுக்கு வரவில்லை என்றும் சொன்னான். பழுவேட்டரையர் பார்த்திபேந்திரனையும் அழைத்துக் கொண்டு தஞ்சாவூருக்குப் பிரயாணமானார்.

## பூர்வ கதை



நந்தினி மிக மர்மமான ஒரு காரிய நிமித்தமாகப் பெரிய பழுவேட்டரையரை

மணந்திருந்தாள். போரில் ஆதித்த கரிகாலனால் கொல்லப்பட்ட வீரபாண்டியனுக்கு 'ஆபத்துதவிகள்' என்ற மெய்க்காவலனாயிருந்த ரவிதாஸன் என்னும் மந்திரவாதியும் அவனைச் சேர்ந்த சிலரும் நந்தினியுடன் அந்தரங்கத் தொடர்பு வைத்திருந்தனர். இளவரசர் இறந்துவிட்டார் என்பதை ரவிதாஸன் நம்புவதற்காக, வந்தியத் தேவன் தானே இளவரசரை நடுக்கடலில் கொன்றுவிட்டதாகக் கூறினான். பின்னர் தமிழகமெங்கும் புகழ் பெற்றிருந்த அறிவின் செல்வியை, - அழகுத் தெய்வத்தை, - குந்தவை தேவியை மறுபடியும் பார்த்து, அவள் தனக்கு இட்ட கட்டளையை நிறைவேற்றி விட்டதைச் சொல்லுவதற்கு அவன் பழையாறையை நோக்கி ஆவலோடு புறப்பட்டான்.

வழியில் அவன் ஏறிச் சென்ற குதிரையின் காலில் கல் பொத்து அது தடமாடத் தொடங்கியது. குதிரைக் குளம்புகளுக்குக் கவசம் போடும் நோக்கத்துடன் சாலையோரத்திலிருந்த கொல்லன் பட்டறையொன்றில் அவன் புகுந்தான்.

மீன் உருவம் பதித்த அபூர்வமான வாள் ஒன்றைக் கொல்லன் செப்பனிட்டுக் கொண்டிருப்பதை வந்தியத் தேவன் பார்த்துவிட்டு அங்கேயே தூங்கிப் போனான். இருட்டும் சமயத்தில் மறுபடியும் கிளம்பி முள்ளியாற்றங்கரையோடு சென்றான். அங்கே ரவிதாஸனுடைய கூட்டாளி தேவராளன் தோன்றினான்.

தேவராளனுடன் பேசிக் கொண்டிருந்தபோது சில வீரர்கள் திடீரென்று தோன்றி வந்தியத் தேவனைக் கட்டி ஒரு மூடு பல்லக்கில் போட்டுக் கொண்டு போனார்கள். மயக்கத்தில் ஆழ்ந்த வந்தியத்தேவன் கண் விழித்துப் பார்த்தபோது நந்தினி அவன்முன் வருவதைக் கண்டான்!

## பதினான்காம் அத்தியாயம்

# பறக்கும் குதிரை

நந்தினி ஒளி வீசிய அந்த வாளை எடுத்து ஆசையுடன் தன் மார்போடு அணைத்துக் கொண்டாள். பிறகு முகத்துடன் சேர்த்து வைத்துக் கொண்டு தன் செவ்விதழ்களினால் முத்தமிட்டாள். ஒரு கணம் அக்கினிக் கொழுந்தைச் செந்தாமரை மலர் முத்தமிடுவது போலிருந்தது. அடுத்த கணத்தில் இரத்த வர்ண மேகம் பூரண சந்திரனைக் குறுக்கே நின்று தடுக்கப் பார்ப்பது போலிருந்தது. நந்தினியின் முகம் அப்போது கபாலிகர்கள் பூசித்த இரத்த பலி கேட்கும் காளியின் கோர சௌந்தரிய முகம் போலாயிற்று. கத்தியை எடுத்து முன்போல் பக்கத்தில் வைத்ததும் அவளுடைய முகம் பழைய வசிகரத்தை அடைந்தது.

"ஆம்; தெய்வம் எனக்கு அளித்திருக்கும் சூசகம் இந்த வாள். ஆனால், அந்தச் சூசகத்தின் பொருள் இன்னதென்பதை நான் இன்னும் அறியவில்லை. இந்த வாளை நான் அடிக்கடி கொல்லன் உலைக்கு அனுப்பித் துரு நீக்கிப் பதப் படுத்திக் கூராக்கி வைத்துக் கொண்டு வருகிறேன். தாய்ப் புலி தான் பெற்ற குட்டிப் புலியைப் பாதுகாப்பது போல் இதை நான் பாதுகாத்து வருகிறேன். உரிய பிராயம் வருவதற்குள் புலிக் குட்டி நீளக் கொம்பு படைத்த காட்டு மாடுகளிடம் அகப்பட்டுக் கொள்ளக் கூடாது அல்லவா? அராபிய நாட்டார் தங்கள் குதிரையை எவ்வளவு அன்புடன் பேணுகிறார்களோ, அப்படி இதை நான் பாதுகாத்து வருகிறேன். நோய்ப்பட்ட சுந்தரசோழச் சக்கரவர்த்திக்கு வானமா தேவி பணிவிடை செய்வது போல் நாளும் இந்த வாளுக்குச் செய்து வருகிறேன். இதைக் கொண்டு நான் என்ன செய்ய வேண்டும் என்பதைத் தெய்வம் இன்னும் எனக்கு அறிவிக்கவில்லை. மலர் மாலை தொடுத்துப் பழகிய இந்தக் கைகளினால் இந்த வாளை எந்தக் கொடியவனுடைய விஷ நெஞ்சத்திலாவது செலுத்த வேண்டுமென்பது தெய்வத்தின் ஆக்ஞையோ, அல்லது என்னுடைய மார்பில் என்னுடைய கையி



ஞலேயே இதைச் செலுத்திக் குபுகுபு வென்று பெருகும் இரத்தத்தை ஆடை ஆபரணங்களால் அலங்கரித்த இந்த உடம்பில் பூசிக் கொண்டு நான் சாக வேண்டும் என்பது தெய்வத்தின் சித்தமோ, இன்னும் அது எனக்குத் தெரிய வில்லை. இந்த வாளை எனக்கு அளித்திருக்கும் தெய்வம் சமயம் வரும் போது அதையும் எனக்குத் தெரியப் படுத்தும். அந்தச் சமயம் எப்போது வரும் என்று தெரியாதபடியால் இரவும் பகலும் எந்த நேரத்திலும் ஆயத்தமா யிருக்கிறேன். ஆம்; அழகுக்குப் பெயர் போன பழுவூர் இளைய ராணிக்கு ஆடை ஆபரண அலங்காரங்களில் மிக்க பிரியம் என்பது நாடறிந்த செய்தி. இரவு பகல் அறுபது நாழிகையும் நான் இந்த என் மேனியை அலங்கரித்து அழகுபடுத்தி வைத்துக் கொண்டிருந்தேன். பாவம்! பெரிய பழுவேட்டரையர் அவருக்காகவும் அவருடைய கௌரவத்தை முன்னிட்டும் நான் இப்படி சதா சர்வகாலமும் சர்வாலங்காரத்துடன் விளங்குவதாக நினைத்துச் சந்தோஷப்பட்டுக் கொண்டிருக்கிறார்! என் நெஞ்சகத்தில் கொழுந்து விட்டெரியும் தீயை அவர் அறியார்!''

இதையெல்லாம் பிரமை பிடித்தவன் போலக் கேட்டுக் கொண்டிருந்த வல்லவரையன் சுய உணர்ச்சியை வருவித்துக் கொண்டு, ''அம்மணி! பெரிய பழுவேட்டரையர் எங்கே?'' என்று கேட்டான்.

''ஏன்? அந்தக் கிழவரைப் பார்ப்பதற்கு உமக்குப் பயமா யிருக்கிறதா?'' என்றாள் நந்தினி.

''இல்லை, அம்மணி! தங்களைப் பார்க்கவே நான் பயப்பட வில்லையே! பழுவேட்டரையரிடம் எனக்கு என்ன பயம்?'' என்றான் வந்தியத்தேவன்.

''ஆகா! உம்மை எனக்குப் பிடித்திருப்பதின் காரணம் அதுதான். எதனாலோ என்னைக் கண்டு எல்லோரும் பயப்படுகிறார்கள். வீராதி வீரரும் எத்தனையோ போர்க்களங்களில் போரிட்டு உடம்பில் அறுபத்து நாலு புண் சுமந்தவருமான பெரிய பழுவேட்டரையர் என்னைக் கண்டு பயப்படுகிறார். சின்னப் பழுவேட்டரையர், — காலனையும் கதி கலங்க அடிக்கக்கூடிய காலாந்தக கண்டர், — என்னிடம் வரும் போது பயந்து நடுங்குகிறார். இந்தச் சோழ சாம்ராஜ்யத்தை ஏக சக்ராதிபதியாக ஆள விரும்பும் மதுராந்தகத் தேவர் என்னிடம் வரும்போது பயபக்தியுடன் வருகிறார். யமலோகத்தை எட்டிப் பார்த்துக் கொண்டிருக்கும் சுந்தர சோழச் சக்கரவர்த்திகூட நான் அருகில் சென்றால் நடுங்குகிறார். ஒவ்வொரு தடவை அவர் என்னைக் கண்டு மூர்ச்சையே அடைந்து விடுகிறார். இன்



றைக்கு வந்தானே பார்த்திபேந்திர பல்லவன்? அவனுடைய அஞ்சாநெஞ்சத்தையும் வீரத்தைப் பற்றியும் வெகுவாகக் கேள்விப்பட்டிருக்கிறேன். ஆதித்த கரிகாலரின் உயிர்த் தோழர் என்றும் அறிந்திருக்கிறேன். ஆனால் என் அருகில் வந்த அரை நாழிகைக்கெல்லாம் அவன் எப்படி அடங்கி ஒடுங்கிப் போய் விட்டான்? ஆதித்த கரிகாலரிடம் உடனே போக வேண்டிய கடமையையும் மறந்து என்னைத் தொடர்ந்து வருகிறான். நான் காலால் இட்ட பணியைத் தலையால் நிறைவேற்றி வைக்க ஆயத்தமாயிருக்கிறான். அதே சமயத்தில் என் அருகில் நெருங்கும் போது அவன் நடுங்குகிறான். அதைப் பார்க்கும் போது எனக்கு ஒன்று நினைவுக்கு வருகிறது. சிறு குழந்தையாயிருந்த போது எரியும் நெருப்பைக் காண எனக்கு ஆசையாயிருக்கும். நெருப்பின் அருகில் செல்வேன். தீயின் கொழுந்தைத் தொடுவதற்கு ஆசையுடன் கை விரலை நீட்டுவேன். ஆனால் அதற்குத் தைரியம் வராது. சட்டென்று விரலை எடுத்துக் கொண்டு விடுவேன். இம்மாதிரி எத்தனையோ தடவை செய்திருக்கிறேன். பார்த்திபேந்திரன் என் பக்கத்தில் நெருங்கி வருவதையும் பயந்து விலகுவதையும் பார்க்கும் போது அந்தப் பழைய ஞாபகம் எனக்கு வந்தது. பல்லவன் மட்டும் என்ன? நீர் யாருடைய தூதராக ஓலை எடுத்துக் கொண்டு காஞ்சியை விட்டுக் கிளம்பினீரோ, அந்த ஆதித்த கரிகாலரும் அப்படித்தான். நாங்கள் குழந்தைகளாயிருந்த நாளிலிருந்து அவருக்கு என் பேரில் அளவில்லாத வாஞ்சை; கூடவே ஒரு பயம். அதனால் என் வாழ்க்கை எப்படியெல்லாம் மாறி விட்டது? ஐயா! உமது எஜமானரை நீர் மறுபடியும் சந்திக்கும் போது எனக்காக ஒரு செய்தி சொல்வீரா? 'சென்றதையெல்லாம் நான் மறந்து விட்டேன். நான் இப்போது அவருக்குப் பாட்டி உறவு பூண்ட பழுவூர் ராணி. என்னைப் பார்ப்பதற்குச் சிறிதும் பயப்பட வேண்டாம். அவரை நான் கடித்துத் தின்று விழுங்கிவிட மாட்டேன்!' என்று சொல்லுவீரா?''

''தேவி! நான் உயிரோடு திரும்பிப் போய் ஆதித்த கரிகாலரைப் பார்ப்பேன் என்பது நிச்சயமில்லை. அப்படிப் பார்த்தால் அவரிடம் நான் சொல்லுவதற்கு எத்தனையோ செய்திகள் இருக்கின்றன. தங்களுடைய செய்தியைச் சொல்லுவதாக என்னால் உறுதி கூற முடியாது. தயவுசெய்து மன்னிக்க வேணும்!''

''ஆம்; நான் பார்த்திருப்பவர்களுக்குள்ளே நீர் ஒருவர்தான் தைரியசாலி. மனத்தில் உள்ளதை ஒளியாமல் பேசுகிறவர். ஆகையால்தான் உம்மை எனக்குப் பிடித்திருக்கிறது. வாணர் குல வீரரே! நான் அதிகம் பேரைப் பார்ப்பது கிடையாது. பழையாறை இளைய பிராட்டியைப் போல் ரதத்தில் ஏறிப் பிரயாணம் செய்வதில்லை. எங்கேயாவது போக வேண்டி நேர்ந்தால் மூடு பல்லக்கில் போகிறேன். எனக்கு யார் மூலமாகவாவது ஏதேனும் காரியம் ஆக வேண்டியிருந்தால் அவர்களை மட்டும்தான் பார்க்கிறேன். அவர்கள் பெரும்பாலும் கோழைகளாயிருக்கிறார்கள். மனத்தில் உள்ளதைச் சொல்லுவதற்குத் துணிவதில்லை. நீர் மனத்தில் தோன்றுவதை ஒளிக்காமல் சொல்கிறீர்......''

''ஒளிப்பதில் பயனில்லை என்று நான் அறிந்திருக்கிறேன், ராணி! தங்களுடைய கண்கள் ஊடுருவிச் சென்று அறிய முடியாத இரகசியம் எந்த மனிதனுடைய நெஞ்சிலும் இருக்க முடியாது.''

''அது உண்மையாக இருக்கலாம். ஆனால் உம்முடைய நெஞ்சில் உள்ளதைத்தான் நான் இன்னும் அறிந்து கொள்ள முடியவில்லை. போனால் போகட்டும். பழுவேட்டரையரைப் பற்றிக் கேட்டீர். என் கணவரும் பார்த்திபேந்திரனும் பரிவாரங்களுடன் பக்கத்துக் கிராமத்துக்குச் சென்றிருக்கிறார்கள். அங்கே கண்ணனிக் கூத்தும் வேலனாட்டமும் நடைபெறுகின்றன. சின்ன இளவரசரைப் பற்றி வெறியாட்டக்காரனிடம் ஏதாவது தெரிந்து கொள்ள முடியுமா என்று பார்ப்பதற்காகப் போயிருக்கிறார்கள் பைத்தியக்காரர்கள்! யாரைக் கேட்கவேண்டுமோ அவரைப் பிடித்துக் கேட்காமல் ஜோசியக்காரனிடம் சென்றிருக்கிறார்கள். திரும்பி வருவதற்கு வெகு நேரம் ஆகும். ஆகையால்தான் உம்மை நான் அழைத்து வரச் செய்தேன். ஐயா! மறுபடியும் கேட்கிறேன். இளவரசரைப் பற்றிய உண்மை உமக்குத் தெரியும் அல்லவா? அதை நீர் எனக்குச் சொல்ல மாட்டீர் அல்லவா?''

''இல்லை, தேவி! சொல்லுவதற்கில்லை! இனிமேல் எந்தக் காரியத்துக்கும் புனைந்துரைப்பதில்லையென்றும், உண்மையே சொல்லுவதென்றும் இன்றைக்குத்தான் தீர்மானம் செய்து கொண்டேன். ஆகையால், இளவரசரைப் பற்றிச் சொல்ல முடியாது. சற்று முன்னால்கூட என் தீர்மானத்தை மறந்துவிட்டேன். மன்னிக்கவேணும்!'' என்று சொல்லிக் கொண்டே வந்தியத்

தேவன் தன்னுடைய இடைக்கச்சின் சுருளை அவிழ்த்து அதற்குள்ளே யிருந்த பனை இலச்சினை மோதிரத்தை எடுத்தான்.

''அம்மணி! இதோ தாங்கள் அளித்த பனை முத்திரை மோதிரம். இலங்கையில் பூதிவிக்கிரமகேசரியின் ஆட்கள் இதை என்னிடமிருந்து பலவந்தமாகக் கவர்ந்து கொண்டது உண்மைதான். ஆனால் சேநாதிபதி திருப்பிக் கொடுத்து விட்டார். இதோ தங்களிடம் சேர்ப்பித்து விடுகிறேன்; பெற்றுக் கொண்டு அருள் புரிய வேணும்!'' என்று கூறி முத்திரை மோதிரத்தை நீட்டினான்.

நந்தினி அதை உற்றுப் பார்த்துத் தான் கொடுத்த முத்திரை மோதிரம் அதுதான் என்று தெரிந்து கொண்டாள்.

''ஐயா! நான் கொடுத்ததைத் திரும்பி வாங்கிக் கொள்ளும் வழக்கமில்லை. உம்முடைய உண்மையைச் சோதித்து அறிவதற்காகவே கேட்டேன். சோதனையில் நீர் தேறிவிட்டீர். என்னுடைய ஆட்களைக் கொண்டு உம்மைச் சோதனை போடும்படியான அவசியத்தை எனக்கு ஏற்படுத்தவில்லை. மோதிரத்தை என்னுடைய ஞாபகத்துக்காக நீரே வைத்துக் கொள்ளலாம்!'' என்றாள்.

''அம்மணி! யோசித்துச் சொல்லுங்கள். இது என்னிடமிருந்தால் மீண்டும் அவசியம் நேரும்போது உபயோகப்படுத்த வேண்டியிருக்கும்....''

'' அதைப் பற்றிக் கவலையில்லை. எப்படி வேணுமானாலும் உபயோகப் படுத்திக் கொள்ளலாம். உம்மை இப்போது மறுபடியும் கண்ணைக் கட்டிப் பல்லக்கிலே ஏற்றிக் கொண்டு போகச் சொல்லப் போகிறேன். உம்மைப் பிடித்த இடத்திலேயே திரும்ப விட்டு விடுவார்கள்...''

''நான் அதற்கு மறுத்தால் ?''

''இந்தப் பாழடைந்த அரண்மனையிலிருந்தும் கோட்டையிலிருந்தும் உம்மால் திரும்பிப் போக முடியாது. திரும்பத் திரும்பப் புறப்பட்ட இடத்துக்குத் தான் வந்து கொண்டிருப்பீர்....''

''தேவி! இந்தக் கோட்டை? இந்தப் பாழடைந்த அரண்மனை?....''

''ஆம்; ஒரு காலத்தில் இந்தச் சோழ நாடு பல்லவர் ஆட்சியில் இருந்தது. வெகு காலம் இருந்தது. அப்போது பல்லவ சக்கரவர்த்திகள் இங்கே கோட்டையும் அரண்மனையும் கட்டியிருந்தார்கள். பிறகு சோழ நாடு பாண்டியர்கள் வசப்பட்டது. பாண்டிய மன்னர்கள் சில சமயம் இந்த அரண்



(24ம் பக்கம் பார்க்க)

மனையில் வசித்தார்கள். விஜயாலய சோழர் காலத்தில் இங்கே ஒரு பெரிய யுத்தம் நடந்தது. கோட்டை இடிந்து தகர்ந்தது. அரண்மனையிலும் பாதி அழிந்தது. மிச்சம் அழியாமலிருந்த பகுதியில் இப்போது நாம் இருக்கிறோம். இந்தக் கோட்டையைச் சிலர் பல்லவ ராயன் கோட்டை என்றும் பாண்டிய ராயன் கோட்டை என்றும் சொல்வார்கள். இரண்டிலும் உண்மை உண்டு. ஆனால் நன்றாக வழி தெரிந்தவர்களாலேதான் இதற்குள்ளே வந்து விட்டு வெளியேற முடியும்! என்ன சொல்கிறீர் ? என் ஆட்களை அழைத்துக் கொண்டு போய்விடச் சொல்லட்டுமா ? அல்லது நீரே வழி கண்டு பிடித்து....''

''இல்லை, தேவி ! வழி கண்டுபிடித்துச் செல்ல எனக்கு நேரமில்லை. என்னை அழைத்து வந்தவர்களே திரும்ப அழைத்துச் செல்லட்டும். ஆனால்.... நான் போவதற்கு முன்னால்...என்னைத் தாங்கள் அழைத்து வரும்படி சொன்ன காரணம் வேறொன்றும் இல்லையா? நான் தங்களுக்குச் செய்யக் கூடிய உதவி வேறொன்றும் இல்லையா ? அப்படி ஏதாவது இருந்தால், சொல்லுங்கள்!''

''நல்லது; நீர் கேட்கிறபடியால் சொல்கிறேன். பறக்கும் குதிரை ஒன்று எனக்கு வேண்டும். உம்மால்

முடிந்தால் சம்பாதித்து வந்து கொடுக்கலாம்.''

''என்ன? பறக்கும் குதிரை என்று சொன்னீர்கள் ?''

''ஆம்; பறக்கும் குதிரைதான்!''

'' பறப்பது போல் அதி வேகமாய் ஓடக்கூடிய அரபு நாட்டுக் குதிரையைச் சொல்கிறீர்களா ?''

''இல்லை; இல்லை ! என்றால் அத்தகைய குதிரை மேல் ஏறவே முடியாது. பூமியில் கால் வைத்து ஓடும் குதிரையை நான் சொல்லவில்லை. பறவைகளைப் போல் இறகுகளை விரித்து வானத்தில் பறந்து செல்லும் குதிரையைச் சொல்கிறேன். அம்மாதிரி அதிசயக் குதிரைகள் இந்தப் பூவுலகில் எங்கேயோ இருப்பதாகக் கதைகளில் கேட்டிருக்கிறேன். அத்தகைய இறகுள்ள பறக்கும் குதிரைதான் எனக்கு வேண்டும் !''

''எதற்காக? சொர்க்கலோகத்துக்குப் பறந்து போவதற்காகவா ?''

''என்னைப் பார்த்தால் சொர்க்கத்துக்குப் போகக் கூடியவளாகத் தோன்றுகிறதா? அத்தகைய புண்ணியம் செய்தவள் அல்ல நான். கொடிய பாவங்கள் பல செய்தவள்.''

'''சொர்க்கத்தில் உள்ளவர்கள் புண்ணியம் மட்டுந்தானா செய்கிறார்கள் ? அங்கேயும் பாவங்கள் செய்கிறார்கள். அதற்குப் பரிகாரம் தேடப் பூவுலகத்துக்கு வருகிறார்கள். வந்த காரியம் ஆனதும் சொர்க்கத்துக்குப் போகிறார்கள்.''

''இல்லை; எனக்குச் சொர்க்கத்துக்குப் போக விருப்பம் இல்லை. பாண்டிய நாட்டில் ஒரு பாலைவனம் இருக்கிறது. அதன் நடுவில் சில மொட்டைப் பாறைகள் இருக்கின்றன. புல்பூண்டு முளைக்காத பாறைகள். அவற்றில் சில முழைகள் இருக்கின்றன. ஒரு காலத்தில் அந்த முழைகளில் திகம்பர ஜைனர்கள் இருந்து தவம் செய்தார்கள். இப்போது பாம்புகளும் நரிகளும் அவற்றில் வசிக்கின்றன. தேவலோகத்து அமராவதி நகரைக் காட்டிலும் அந்தப் பாண்டிய நாட்டுப் பாலைவனப் பாறைகளே எனக்கு அதிகம் பிடித்தமானவை.''

''தேவி ! தங்களுடைய ஆசை அதிசயமானதுதான்.''

'' பறக்கும் குதிரை கிடைத்தால் நான் அந்தப் பாலைவனத்துக்குப் போவேன். பிறகு அங்கிருந்து இலங்கைத் தீவுக்குப் பறந்து செல்வேன். இலங்கையில் வானை முட்டும் மலைகளும் அம்மலைகளை மறைக்கும்படி உயர்ந்த மரங்கள் அடர்ந்த காடுகளும் இருக்கின்றனவாம். இந்தச் சோழ நாட்டில் காணப்படும் எருமை மந்தைகளைப் போல் இலங்கைக் காடுகளில் யானை மந்தைகள் திரியுமாம். அவற்றையெல்லாம் பார்ப்பேன். இன்னும் இந்தப் பூவுலகத்தின் மத்தியில் உலகம் தோன்றின நாள் தொட்டுப் பனிக்கட்டியால் மூடப்பட்ட சிகரங்களை உடைய மலைகள் இருக்கின்றனவாம். சூரியன் உதயமாகும் சமயத்தில் அவை வெள்ளி மலைகளைப் போல் ஜொலிக்குமாம். பறக்கும் குதிரை மேல் ஏறிச் சென்று அம்மலைச் சிகரங்களைப் பார்க்க விரும்புகிறேன். இன்னும் அப்பால் பாண்டிய நாட்டுப் பாலைவனத்தைப் போல் பதினாயிரம் மடங்கு விஸ்தாரமான பாலைவனங்கள் ஒரே வெண் மணல் காடாக இருக்குமாம். பகல் வேளையில் அங்கே எரியும் தீயின் மத்தியில் இருப்பது போலவே தோன்றுமாம். அங்கேயெல்லாம் போக விரும்புகிறேன். இன்னும் அப்பால் போனால் கடுங் குளிர் காரணமாகக் கடல் நீர் உறைந்து கெட்டிப்பட்டு மனிதர்களும் மிருகங்களும் நடந்து போகும்படி இருக்குமாம். பறக்கும் குதிரை மேல் ஏறிச் சென்று அந்த இடங்களைப் பார்க்க விரும்புகிறேன்....''

''தேவி! என்றால் அத்தகைய பறக்கும் குதிரையைத் தங்களுக்குக் கொண்டு வந்து தர முடியாது. ஆனால் தாங்கள் கூறிய சில இடங்களுக்குப் போகச் சுலபமான வழி இருக்கிறது. ஒரு நல்ல படகிலே ஏறினால் அரை நாளில் இலங்கைக்குப் போகலாம். கப்பல் ஏறிச் சென்றால்....''

''ஐயா! அந்த வழி எனக்குத் தெரியாத வழி அல்ல. ஆனால் எனக்குக் கடலைக் கண்டால் பயம். கப்பலில் ஏறுவதென்றால் பயம். நதியைப் படகில் ஏறிக் கடக்கும் போது படகு அசைந்தால்கூடப் பயம். ஆகையால் உம்முடைய யோசனை எனக்குச் சிறிதும் பயன்படாது. நீர் போய் வரலாம்!'' என்று கூறி நந்தினி எழுந்தாள்.

''தேவி! வேறொன்றும் தாங்கள் என்னிடம் சொல்வதற்கு இல்லையா?''

''இல்லை! நீர் ஏதோ சொல்ல விரும்புவது போலக் காண்கிறது.''

''ஒரு கேள்வி கேட்க விரும்புகிறேன். அதற்கு மட்டும் விடை சொல்ல வேண்டும். சில நாளைக்கு முன்பு தாங்கள் இலங்கைக்கு வந்திருக்க வில்லையா? அநுராதபுரத்தின் வீதிகளில் இருண்ட நிழலில் தனியாக நின்றிருக்க வில்லையா ?''

''இல்லவே இல்லை. பழுவேட்டரையரின் அரண்மனையையும் காவலையும்

எஸ். ரங்கநாயகி எழுதும்

# குடை ராட்டினம்

புதிய தொடர் கதை



## கல்கி

18.1.1970
பொங்கல்
மலரில்
ஆரம்பமாகிறது

தாண்டி நான் ஒரு பொழுதும் அப்பால் சென்றதே இல்லை. உமக்கு ஏன் அத்தகைய சந்தேகம் உதித்தது ?''

''அம்மணி! இலங்கையில் சில தினங்களுக்கு முன்பு தங்களைப் பார்த்தேன். அல்லது தங்களைப் போன்ற மாய உருவம் ஒன்றைப் பார்த்தேன். 'பறக்கும் குதிரை' என்றெல்லாம் சொல்லுகிறீர்களே? ஒரு வேளை உண்மையில் அத்தகைய குதிரை தங்களிடம் இருக்கிறதோ, அதில் ஏறி அங்கு வந்தீர்களோ என்று நினைத்தேன். ஆனால் இப்போது போல் ஆடை ஆபரணங்கள் புனைந்து அலங்காரமாக இருக்கவில்லை. சாதாரண சேலை ஒன்று மட்டும் உடுத்தி ஒருவித ஆபரணமும் புனையாமல் கூந்தலை விரித்துப் போட்டுக் கொண்டு நின்றீர்கள். அந்த ஸ்திரீ தாங்கள் அல்லவா ?''

''இல்லை, நான் இல்லை, ஐயா! நீர் கூறும் அந்த ஸ்திரீ வாய் திறந்து ஏதாவது பேசினாளா ?''

''இல்லை; ஜாடையினாலேதான் பேசினாள். ஆனால் தங்களுக்கு மந்திரவாதிகளுடன் பழக்கம் இருக்கிறது. ஒருவேளை அத்தகைய மந்திர சக்தியினால் தங்களுடைய சூக்ஷ்ம வடிவம் அங்கே வந்திருக்கலாம் அல்லவா ?''

''நானோ, என்னுடைய சூக்ஷ்ம சரீரமோ இல்லை என்றால்?....''

''தங்களை வடிவத்தில் மிகவும் ஒத்த வாய் பேச முடியாத ஊமை ஸ்திரீயாக அவள் இருக்க வேண்டும்.''

நந்தினியின் பார்வை எங்கேயோ வெகு தூரத்தில் சென்றிருந்தது. ஒரு நெடிய பெருமூச்சு விட்டாள்.

''ஐயா! சற்று முன்னால் எனக்கு ஏதேனும் உதவி செய்ய விரும்புவதாகச் சொன்னீர் அல்லவா ?''

''ஆம் !''

''அது தாங்கள் உண்மையாகச் சொன்ன வார்த்தைதானே ?''

''சந்தேகமில்லை.''

''அப்படியானால் இதைக் கேளும். எப்போதாவது ஒரு சமயம் மறுபடியும் அந்த ஸ்திரீயைப் பார்க்க நேர்ந்தால் அவளை எப்படியாவது பிடித்துக் கொண்டு வந்து என்னிடம் சேர்ப்பியும். அது முடியாவிட்டால் என்னையாவது அவளிடம் அழைத்துக் கொண்டு செல்லும்!'' என்றாள் நந்தினி.

அரை நாழிகைக்கெல்லாம் வந்தியத்தேவன் மறுபடியும் முல்லையாற்றங்கரையில் நின்றான். அவனுடைய குதிரையும் பக்கத்தில் நின்றது. அவனை அங்கே அழைத்து வந்தவர்கள் ஒரு நொடியில் மறைந்து விட்டார்கள். தேவராளனைக் கூடக் காணவே இல்லை.

முல்லையாற்றங்கரை யோரமாகக் குதிரையை மெதுவாகவே செலுத்திக் கொண்டு வந்தியத்தேவன் இரவெல்லாம் பிரயாணம் செய்தான். மூன்றும் ஜாமத்தில் வால் நட்சத்திரம் அதன் பூரண வளர்ச்சியை அடைந்து வானத்தில் ஒரு நெடிய பகுதியை அடைத்துக் கொண்டு காணப்பட்டது. மக்கள் உள்ளத்தில் பீதியை விளைவித்த அந்தத் தூமகேதுவின் காரணமாக உண்மையிலேயே ஏதேனும் விபரீதம் ஏற்படப் போகிறதா அல்லது இதெல்லாம் வெறும் குருட்டு நம்பிக்கைதானா என்று அடிக்கடி அவன் சிந்தனை செய்தான். நந்தினியின் நினைவும் இடையிடையே வந்து கொண்டிருந்தது. அவள் கூறிய வார்த்தைகள் எல்லாம் அவன் மனத்தில் நன்கு பதிந்திருந்தன. முதல் தடவை தஞ்சை அரண்மனையில் அவளைப் பார்த்தபோது ஏற்பட்ட அருவருப்பு உணர்ச்சி இப்போது மறைந்து விட்டது. ஏதோ பயங்கரமான துன்பங்களில் அடிபட்டவள் இவள் என்ற எண்ணத்தினால் ஒருவித அநுதாபமே உண்டாகியிருந்தது. ஆயினும் அவளுடைய நோக்கம் என்ன, அவள் செய்ய விரும்பும் காரியம் என்ன, அவளுடைய உண்மையான வாழ்க்கை வரலாறு என்ன என்பவை மர்மமாக இருந்தபடியால் ஒரு பக்கத்தில் கோபமும் இருந்தது. ஒப்பில்லாத சௌந்தரியத்தோடு ஏதோ ஒருவித மாயா சக்தி உடையவள் அவள் என்றும் தோன்றியது. ஆதலின் அவளுடன் இனி எவ்வித சம்பந்தமும் வைத்துக் கொள்ளாமல் இருப்பதே நல்லது. பனை இலச்சினை உள்ள மோதிரத்தை அவள் திரும்பி வாங்கிக்கொண்டிருந்தால் எவ்வளவோ நன்றாயிருக்கும். அதை வாங்கிக் கொள்ள மறுத்து விட்டாளே? நதியிலே எறிந்து விடலாம் என்றால், அதற்கும் மனம் வரவில்லை. இந்த அபாயகரமான காலத்தில் அது மீண்டும் சமயத்துக்கு உபயோகப்படலாம். எதற்காக எறிய வேண்டும்?

பழையாறைக்குச் சென்று இளைய பிராட்டியைப் பார்த்துச் சொல்லவேண்டிய செய்தியையும் சொல்லி விட்டால், அப்புறம் அதை எறிந்தே விடலாம். இம்மாதிரி தொல்லையான காரியங்களில் பின்னர் பிரவேசிக்கவே கூடாது.

இரவு நாலாம் ஜாமத்தில் கிழக்குத் திசையில் வெள்ளி முளைத்தது. சுக்கிரனை எதிரிட்டுக் கொண்டு போகக் கூடாது என்று வந்தியத்தேவன் கேள்விப்பட்டிருந்தான். குதிரையை நிறுத்தி ஒரு மரத்தில் கட்டிவிட்டுத் தானும் தரையில் படுத்துச் சிறிது உறங்கினான்.

(தொடரும்)




# நடமாடும் ஆய்வகம்

**பொ**துவாகவே தமிழ்நாட்டுப் போலீஸார் திறமைக்குப் பெயர் போனவர்கள் என்பது பிரசித்தம். அவர்களது சேவை மேலும் சிறக்கக் கடந்த ஆண்டு ஜூலை மாதம் முதல் நகரில் 'நடமாடும் குற்றஞ் சார்ந்த அறிவியல் ஆய்வகம்' (Mobile Forensic Science Laboratory) இயங்கி வருகிறது. பெயர் நீளமாக இருந்தாலும் மிகக் குறுகிய காலத்தில் சிறப்பான சேவை புரிய உதவும் சாதனம் இது.

இந்த வண்டியின் உபயோகம் குறித்து உதவி போலீஸ் கமிஷனர் திரு எம். என். ராஜா கூறுகிறார்: ''இதற்கு முன்பெல்லாம் குற்றம் நிகழ்ந்த ஸ்தலத்துக்கு புகைப்படக்காரர்கள், கைரேகை நிபுணர்கள், ஆய்வாளர் ஆகியோர் தனித்தனியே வெவ்வேறு நேரங்களில் சென்று துப்புத் துலக்குவது வழக்கம். போலீஸ் நாயும் அனுப்பப்படும். இந்த நடமாடும் ஆய்வகம் வந்த பிறகு மேற்கூறிய அனைவரும் ஒரே சமயத்தில் குற்றம் நிகழ்ந்த இடத்துக்கு விஜயம் செய்கிறார்கள். இவர்களுடன் குற்றஞ் சார்ந்த அறிவியல் ஆய்வகத்தின் உதவி இயக்குநரும் செல்லுவார். சுமார் முப்பதாயிரம் ரூபாய் செலவில் காவல் துறைக்கெனப் பிரத்தியேகமாக உருவாக்கப்பெற்ற இந்த வண்டியில் ஓட்டுநர் நீங்கலாகச் சுமார் ஒன்பது பேர்வரை உட்கார்ந்து கொள்ள வசதி உண்டு. குற்றம் நிகழ்ந்த இடத்துக்கு முதலில் ஆய்வாளர் செல்வார். இந்த ஆய்வக வண்டி தேவைப்பட்டால் அவர் உடனே போலீஸ் கண்ட்ரோல் அறையுடன் தொடர்பு கொள்வார். கைரேகை நிபுணர், ஆய்வாளர்கள் அனைவரையும் வரவழைத்து இந்த வண்டியிலேற்றி அனுப்பி வைப்பது சுலபமாகிறது. போலீஸ் நாயும் உடன் செல்கிறது. பல்வேறு அதிகாரிகளும் குற்றம் நிகழ்ந்த இடத்தில் ஒரே நேரத்தில் சந்திப்பதால், கருத்துக்களைப் பரிமாறிக் கொள்வதும் சாத்தியமாகிறது.''

இந்த நடமாடும் ஆய்வக வண்டியில் முதலுதவிப் பெட்டி, கடப்பாறை, ரம்பம், கத்தி, கோடரி, 5 பாட்டரிகள் கொண்ட டார்ச் விளக்கு, மின்சார ப்ளக், 100 மீட்டர் நீளமுள்ள மின்சாரக் கம்பி, 2 சுருள்கள் நால் கயிறு, ஸ்பாட் விளக்கு இன்னோரன்ன 21 சாதனங்கள் தயாராக உள்ளன.

''மின்சாரக் கம்பி, ஸ்பாட் விளக்கு இவை எதற்கு?''

''மின் வசதி இல்லாத இடங்களில் இருளில் ஆய்வுகள் நிகழ்த்த இவை பயன்படும். இதற்குத் தேவையான மின்சாரம் இந்த நடமாடும் ஆய்வக வண்டியின் பாட்டரியிலிருந்தே கிடைக்கிறது. இவ்வண்டியில் ரேடியோ வசதியும் உள்ளது. போலீஸ் கண்ட்ரோல் அறையிலிருந்தவாறு இந்த வண்டியை ஓரிடத்திலிருந்து இன்னோரிடத்துக்கு அனுப்பி வைக்க முடியும். அடையாற்றில் குற்றம் நிகழ்ந்த ஓர் இடத்தில் இந்த ஆய்வக வண்டி இருக்கிறதென்று வைத்துக் கொள்ளுங்கள். மயிலாப்பூரிலோ மாம்பலத்திலோ இன்னொரு குற்றம் நிகழ்ந்துள்ளதாக எழும்பூரிலுள்ள கண்ட்ரோல் அறைக்குச் செய்தி கிடைத்தால், அடையாற்றில் வேலை முடிந்ததும் நேராக ஆய்வக வண்டியை மாம்பலத்துக்கோ மயிலாப்பூருக்கோ போகும்படி உடனே ரேடியோ மூலம் செய்தி அனுப்பஇயலும்.

கால விரயமில்லாமல் உடனடியாகக் குற்றம் நிகழ்ந்த இடத்திலே ஆய்வுகள் நிகழ்த்துவது மிகச் சிறந்த பலனளிக்கிறது. குற்றம் நிகழ்ந்தவுடனேயே பலத்த மழை பெய்தால் காலடிச் சுவடுகள் போன்ற தடயங்கள் மறைந்து விடக் கூடும் அல்லவா? குற்றம் நடந்த இடத்துக்கு ஆய்வாளர்கள் தாமதமாக வந்து சேர்ந்தால் அவர்களுக்கு முன் அங்கு வருவோர் தெரிந்தோ தெரியாமலோ கைரேகைகள், சாட்சியங்கள், தடயங்களைக் கலைத்துவிடக் கூடும். நடமாடும் ஆய்வகம் இவ்வாறெல்லாம் நேர்வதைத் தவிர்க்க உதவுகிறது.

பேட்டி: ரா.பா.



# கண்ணுங்கருத்துமாக குழந்தைகளைப் பேணும் தாய்மார்களுக்கு




தாயன்பைப் போலத் தூய்மையானது ஆஸ்டர்மில்க். ஜீரணிக்கச் சுலபமானது. எனவே இதிலுள்ள வைட்டமின்களும், இரும்புச் சத்தும் புரதமும், உடலில் பொருந்தி, பயனளிக்கின்றன. இவை குழந்தையின் தேவைகளுக்கேற்ற அளவுகளில் அடங்கியுள்ளன.

**ஒப்பற்ற ஆஸ்டர்மில்க் உலகெங்கும் விவேகமுள்ள தாய்மார்களின் தேர்வு—உங்களைப் போன்ற தாய்மார்களின் தேர்வு.**

# ஆஸ்டர்மில்க்

*உலகெங்கும் பிரபலமான பாலுணவு*

ஒரு க்ளாக்ஸோ தயாரிப்பு

*Creative Unit-218*

# அருட்சிதறல்

தமிழாக்கம் : ராஜாஜி

—மகாத்மா காந்தி—



11

பூவுலகில் அவதரித்து உபதேசித்த மகான்கள் அனைவரும் அன்புதான் வாழ்க்கை முறை என்பதைக் காட்டி வந்திருக்கிறார்கள். சிலர் இதை வற்புறுத்தியும், சிலர் வேறு விஷயங்களை அதிகமாக வற்புறுத்தியும் வந்திருக்கிறார்கள். ஆனால் எல்லாரும் வாழ்க்கையின் அடிப்படைத் தர்மம் அன்பே என்று உபதேசித்து வந்திருக்கிறார்கள். அன்பு என்னும் வேகம் மனித குலத்தை நடத்தியிரா விட்டால் மனித ஜாதி அழிந்தே போயிருக்கும். காலனுக்குத் தினமும் தோல்வி தந்து வருவது அன்பின் வேகம். மிருகத்துக்கும் மனிதனுக்கும் உள்ள பெரிய வித்தியாசம் மனிதன் தன் வாழ்க்கையில் பரஸ்பர அன்புக்குப் பிரதான்யம் கொடுத்து வருவதேதான். உலகத்தில் அவதரித்து வழி காட்டி மறைந்த பெரியவர்கள் எல்லாரும் அன்பே நல் வாழ்க்கையின் ரகசியம் என்று தங்கள் வாழ்க்கையில் நிதர்சனமாகக் காட்டியுள்ளார்கள். நம்முடைய உள்ளங்களுக்குள் இன்னும் மறைந்து நிற்கும் மிருகத்துவம் அவ்வப்போது தலைதூக்கி வருகிறது. ஆயினும் அது அன்பின் ஆட்சியைப் பொய்யாக்கி விடாது. தருமம் உண்மையாயினும் நடத்துவது கடினம். கடினம் இல்லாவிடில் அதன் சிறப்பு என்ன? அனைவரும் அன்பின் ஆட்சியை ஒப்புக்கொண்டு அனைத்திலும் அதைச் செலுத்தி விட்டார்களாகில் பூவுலகமே ஆண்டவனுடைய தேவலோகம் ஆகிவிடும். இகமும் பரமும் நமக்குள்ளே தான் இருக்கின்றன என்பதை அறிவேன். ஆனால் நாம் அறிந்தது இகம். நமக்குள்ளே இருக்கும் பரத்தை நாம் காணவில்லை.

அன்பு வாழ்க்கையை ஒருசிலர் நடத்துவார்கள் என்று ஒப்புக் கொண்டால் ஏன் மற்றவர்களால் முடியாது? அது முடியாது; அதற்கு முயற்சி செய்வது வீண் என்று சொல்வது அகம்பாவம் ஆகும். மனிதர்கள் ஒரு காலத்தில் மிகவும் கோரமான வாழ்க்கை நடத்தியிருக்கிறார்கள். அப்போதுமே சிலர் அது வேண்டாம் என்று சொல்லி, அது காரணமாகப் பரிகாசத்துக்கு ஆளாகியும் வந்திருப்பார்கள். 'ஒருவரை ஒருவர் ஏன் கொன்று சாப்பிடக் கூடாது. நீ சொல்வது அதிசயமாக இருக்கிறது. உளறுதே' என்றும் அவர்களைப் பார்த்து ஏளனம் செய்தே இருப்பார்கள். அது போலவே நான் இப்போது அன்பைப் பற்றிச் சொல்வதை இது முடியாத காரியம் என்றும் விஷயம் தெரியாத பேச்சு என்றும் சிலர் ஆட்சேபிக்கிறார்கள். (ஹரிஜன் 26-9-36)

ஆண்டவன் எங்கேயோ வானத்திலிருந்து கொண்டு ஆட்சி புரியவில்லை. நமக்குள் மறைந்து நிற்கிறான். நம்முடைய ஊனுக்குள், உயிருக்குள் அந்தரங்கமாக இருக்கிறான். நமக்குள் நாம் காணாத சக்தி எவ்வளவோ இருக்கிறது. ஆராய்ச்சியும் முயற்சியும் இடைவிடாது செய்து வந்தால் நமக்குள் இருக்கும் சக்தியை நாம் காணலாம். அப்படியே நமக்குள் இருக்கும் ஆண்டவனையும் கண்டு கொள்ளலாம். அதற்கு வைராக்கியமும் விடாமுயற்சியும் வேண்டும். நமக்குள் குடியிருக்கும் தெய்வத்தைக் காண்பதற்குப் பல துறைகள் உண்டு. அவற்றில் அஹிம்ஸை ஒரு துறை. ஈசன் நமக்குள் இருக்கிறான். ஒவ்வொருவருள்ளும் இருக்கிறான். எல்லா உயிரிலும் ஆண்டவனைக் கண்டு, எல்லா உயிரும் பகவான் சொரூபமே என்பதை உணர வேண்டும். அதுவே அஹிம்ஸையாகும். அனைத்தும் ஒன்று என்பதைப் பௌதிகத்தில் விகவ ஆகர்ஷண சக்தியாக 'க்ராவிடேஷன்' என்கிற பெயர்கொடுத்து விஞ்ஞானிகள் காண்கிறார்கள். உயிர் உணர்ச்சிகளில் அந்த வேகத்தை நாம் அன்பு என்கிறோம். பௌதிகப் பொருள்களைக் கட்டிப் பிணைக்கும் 'க்ராவிடேஷன்', 'கொஹிஷன்' என்று பெயரிடப்பட்ட வேகங்களைப் போலவே உயிர்களை ஒன்றாகப் பிணைத்துக் கட்டும் சக்தி, அன்பு. அதுவே உயிர்களைக் கடவுளுடன் பிணைக்கிறது. அன்பு என்பதே அஹிம்ஸை; அஹிம்ஸை என்பதே அன்பு.

(1-6-42இல் எழுதிய ஒரு கடிதத்திலிருந்து)





# கண்களைக் கண்ணெனக் காக்க...

'குழந்தை ராஜா மாதிரி இருக்கிறான். ஆனால் ஒரு விழி மட்டும் சற்றே இடம் பெயர்ந்துள்ளது. கருடப் பார்வை, 'அதிர்ஷ்டக்காரப் பயல்!' என்று பாராட்டுகிறோம். ஆனால் உண்மையில் அதிர்ஷ்டத்தின் அறிகுறி தானா இது? இல்லை. இதனால் ஏற்படுகிற தொல்லைதான் அதிகம். நாளடைவில் அந்தக் கண் பார்வையே போய் விடலாம். உருப்படியாக மிஞ்சுவது ஒரு கண்ணாகத் தான் இருக்கும். ஏதாவது விபத்தில் அந்த ஒரு கண்ணுக்கும் ஆபத்து நேர்ந்தாலோ ?.... ஆனால் இன்று அது பற்றிக் கவலை இல்லை. ஒன்றரைக் கண் பார்வை உள்ளவர்களின் விழியை நேராக்கி விடும் சஸ்திர சிகிச்சை இப்போதெல்லாம் சர்வ சாதாரணமாக நடக்கிறது.

சென்னை எழும்பூரிலுள்ள கண் மருத்துவ மனையின் 150வது விழாவினை யொட்டி, புதிதாகப் பதினேழு லட்சம் ரூபாய் செலவில் கட்டப் பெற்றுள்ள பிரும்மாண்டமான மருத்துவ மனைக் கட்டடத்தில் அமைக்கப் பெற்றுள்ள கண்காட்சியைப் பார்த்தால் கண் சம்பந்தப்பட்ட இது போன்ற வேறு பல முக்கியமான தகவல்களையும் அறியலாம். உதாரணமாகக் கண் மை உபயோகிக்கும் பெண்கள் ஒவ்வொருவரும் தமக்கெனப் பிரத்தியேகமாக ஒரு மை புட்டி வைத்துக் கொள்ள வேண்டும்; ஒரே மை டப்பாவைப் பலர் பயன்படுத்துவது ஆபத்து என்றும், பேதியை நிறுத்த உடனே சிகிச்சை செய்யாவிடில் கருவிழிகள் புண்பட்டுப் பார்வை இழக்க நேரிடலாம் என்றும் தெரிந்துகொள்கிறோம். கண்ணுக்குத்தான் எத்தனை வியாதிகள் ! எத்தனை ஆபத்துக்கள் ! பெற்றோர் வழி கிரந்தி, அமரம், விடமின் 'ஏ' குறைவால் ஏற்படும் கண் நோய் — இப்படி எட்டு விதமான கண் நோய்கள் குழந்தைகளுக்கே வரக் கூடும். ஆனால், உரிய காலத்தில் சிகிச்சை செய்தால், இந்த நோய்களுக்குப் பரிகாரம் உண்டு.



1. நூறாண்டு கண்ட கண் மருத்துவமனை.
2. கண்ணுக்குச் சிகிச்சை நடக்கிறது.
3. புதிய கண் மருத்துவ மனையின் தோற்றம்.

இன்று ஆசியாவிலேயே பெரியதொரு கண் மருத்துவமனை எனத் திகழும் எழும்பூர் அரசினர் கண் மருத்துவமனை, 1819 ஆம் ஆண்டில் சிறிய கண் சிகிச்சை நிலையமாகத் திரு ஆர். ரிச்சர்ட்ஸன் என்பவரின் முயற்சியால் ராயப்பேட்டையில் உருவாயிற்று. இதுதான் உலகிலேயே இரண்டாவது தொன்மையான கண் மருத்துவமனையாகும். லண்டனில்தான் உலகிலேயே முதன் முதலாகக் கண் மருத்துவமனை தோன்றியது. அங்கு பணியாற்றிய டிராவர்ஸ் என்பவரிடம் கண் நோய் சிகிச்சை பயின்றவர்தாம் ரிச்சர்ட்ஸன். ராயப்பேட்டையில் அந்த மருத்துவ இல்லம் எங்கு அமைந்திருந்தது என்பது குறித்துத் திட்ட வட்டமாக இன்று ஏதும் தெரியவில்லை. ராயப்பேட்டையிலிருந்து 1820ஆம் ஆண்டில் எழும்பூரில் முன்பு டிராம்ஷெட் இருந்த இடத்துக்கு இம்மருத்துவ இல்லம் குடிபெயர்ந்தது. பிறகு எழும்பூர் மார்ஷல் சாலையில் நிழல் தரும் மரங்களுக்கிடையே காட்சியளிக்கும் சிவப்புக் கட்டிடங்கள் 1886ல் கட்டி முடிக்கப் பெற்றதும் அங்கு நிலைபெற்றுவிட்ட கண் மருத்துவ இல்லம், நாளடைவில் வளர்ச்சி








யுற்று 1888இல், 'அரசினர் கண் மருத்துவ மனை' என்ற பெயரையும் அந்தஸ்தையும் அடைந்தது. இன்று 326 படுக்கைகள் உள்ள இம்மருத்துவ மனையில் இடம் போதவில்லை. காரணம், பாரதத்தில் கண் நோய்களுக்கு இலக்காவோரின் எண்ணிக்கை அளவிடற்பாலது. உலகில் கண் பார்வையற்றவர்கள் பதினெட்டு மிலியன் என்றும் அதில் பாரதத்தில் மட்டும் 5.3 மிலியன் ஆகும் என்றும் பார்த்துக் கொள்ளுங்களேன். அமெரிக்காவிலும் பிரிட்டனிலும் லட்சம் மக்களுக்கு நான்கு கண் மருத்துவர்கள் விதம் உள்ளனர்; பாரதத்திலோ மூன்று லட்சம் பேர்களுக்கு ஒருவரே! தமிழ்நாட்டில் மட்டும் ஆண்டுதோறும் 'காடராக்ட்' (கண்ணில் உள்ள லென்ஸ் மூடி மறைக்கப்படுவதால் பார்வை இழக்க நேரிடும் நோய்) காரணமாகப் பார்வை இழப்பவர்களின் எண்ணிக்கை சுமார் இரண்டு லட்சம் என மதிப்பிடப் பெறுகிறது. கண்களைப் பிடிக்கும் நோய்களுள் 'காடராக்ட்'டுக்கு அடுத்தபடியாக இடம் பெறுவது 'கிளாகோமா' எனப்படும் நோய். இவை குறித்து, அரசினர் கண் மருத்துவ மனை அறுவைச் சிகிச்சையாளர் டாக்டர் ஈ. பாலகிருஷ்ணன் கூறுகிறார்:

"'காடராக்ட்' நோய்க்கான சரியான காரணம் இன்னும் புலனாகவில்லை. பாரதத்தில் இது மிகவும் பரவலாக உள்ளது. ஆனால் இங்கிலாந்தில் 'காடராக்ட்' மிக அபூர்வமே. அறுவைச் சிகிச்சை மூலம் இதனைக் குணப்படுத்திவிட முடியும். ஆனால், கிளாகோமாவின் விஷயம் வேறு."

"'கிளாகோமா'வின் அறிகுறிகள் என்ன, டாக்டர்?"

"கண்ணில் உப்புசம், அழுத்தம் ஏற்படும். கண்ணுக்குள் நீர் சுரப்பதால் வலி இருக்கும். தலைவலி, வாந்தி இவையும் ஏற்படும். உள்ளே சுரந்துள்ள நீர் வெளிப்படச் சிகிச்சை செய்ய வேண்டும். சில மருத்துவர்கள் 'கிளாகோமா'வைக் 'காடராக்ட்' என்று தவறாகப் புரிந்து கொண்டு சரியான சிகிச்சை அளிக்கத் தவறி விடுகிறார்கள் என்பதை நான் வற்புறுத்திக் கூற விரும்புகிறேன். "எனக்கு 'கிளாகோமா' நோய் இருக்கிறதா?" என்று நோயாளி டாக்டரைக் கேட்க வேண்டும். அதற்கு அவருக்கு உரிமையுண்டு. கிளாகோமாவை மருந்துகளின் மூலமும் குணப்படுத்த முடியும். முடியாத 'கேஸ்'களை அறுவைச் சிகிச்சை செய்து பார்க்க வேண்டும். பெரும்பாலான 'கிளாகோமா' நோயாளிகள் காலம் தாழ்ந்து வருவதாலேயே சிகிச்சை செய்து பூரண பலன் அடைய முடிவதில்லை. பாஸ்டனில் உள்ள பி. ஏ. சாண்ட்லர் என்பவர்தாம் முதன் முதலாக நான்கு 'கிளாகோமா' கேஸ்களில் அறுவைச் சிகிச்சை செய்தவர். அதற்கு 'சாண்ட்லர் ஆபரேஷன்' என்றே பெயர். ஆனால் அவை நான்குமே வெற்றி பெறவில்லை. கண்ணில் உள்ள லென்ஸையே எடுத்து அறுவைச் சிகிச்சை செய்தார் சாண்ட்லர். அவருடைய முயற்சியை யொட்டி, சில மாறுபாடுகளுடன் அறுவைச் சிகிச்சையில் ஈடுபட்டேன். அதாவது, 'லென்ஸ்'க்குப் பக்கவாட்டில் இலேசாகக் கீறி அங்கு சுரந்துள்ள நீரை வெளியேற்றி விட்டேன். இரு வருட காலத்தில் மொத்தம் ஒன்பது அறுவைச் சிகிச்சைகளை இவ்விதம் வெற்றிகரமாக இங்கு செய்து, அம்முறை குறித்து ஒரு மருத்துவ அறிக்கையும் வெளியிட்டுள்ளேன்."

இம்மருத்துவ மனையின் மற்றொரு பணியும் குறிப்பிடத் தக்கது. ஆண்டுதோறும் எஸ். எஸ். எல். சி. தேர்வு பெற்ற இருபது மாணவர்களுக்கு மூக்குக் கண்ணாடிகள் தயாரிக்கும் தொழிலைக் கற்பித்து வருகிறது. கண்களின் அமைப்பு, பல்வேறு பாகங்களின் இயக்கம், கண் பரிசோதனை, கண்களுக்கேற்ற கண்ணாடிகளை இயந்திரங்களில் உருவாக்குவது ஆகிய விஷயங்களில் ஈராண்டுகள் இம்மாணவர்களுக்குப் பயிற்சி அளிக்கப்படுகிறது.

வண்டலூர் அருகிலுள்ள கோட்டூரிலிருந்து வந்து எழும்பூர் மருத்துவ மனையில் 'காடராக்ட்' அறுவைச் சிகிச்சை செய்து கொண்ட திரு பெ. முருகன் கூறுகிறார்: "முதலில் எனக்கு வலது கண் பார்வையில்லாமல் இருந்தது. ஆறு மாதங்களுக்குமுன் ஆபரேஷன் செய்து கொண்டேன். எட்டு நாட்களுக்குமுன் இடது கண்ணையும் ஆபரேஷன் செய்தார்கள். இப்போது மனிதர்களை அடையாளம் கண்டு கொள்ள முடிகிறது. ஆனால் எழுத்து தெரியவில்லை. கண்ணாடி போட்டுக் கொண்டால் தெரியும். கண்ணாடி போட்டுக் கொள்ள இருபது ரூபாயாவது வேண்டுமே? அதற்கு நான் எங்கே போவேன்? நான் கூலி வேலை செய்து பிழைக்கிறவனுச்சே?" என்கிறார்.

இவரது குறையைக் கேட்கும்பொழுது, ஒரு பயனுள்ள யோசனை கூறத் தோன்றுகிறது. இங்கு, கண் இழந்தவர்களுக்குக் கண் வழங்குவதற்காக ஒரு 'கண் பாங்க்' இயங்கி வருகிறது. இவ்விதமே ஒரு கண்ணாடி பாங்க் இயங்கவும் ஏற்பாடு செய்தால் மிக்க பயனளிக்கும். கண்ணாடி அணிபவர்கள் ஈராண்டுகளுக்கு ஒரு முறை கண்ணாடிகளை மாற்ற நேரிடும். புதிய கண்ணாடி வாங்கி அணிந்துகொள்ளும் வசதி படைத்த மக்களிடமிருந்து, அவர்களுடைய பழைய கண்ணாடிகளைச் சேகரிக்கும் பணியையும் இம்மருத்துவமனை மேற்கொண்டால், ஏழை மக்களுக்கு இலவசமாகக் கண்ணாடி வழங்க இயலும் அல்லவா?

—'பாணன்'




சென்னை, சேப்பாக்கம் மைதானத்தில் கிரிக்கெட் டெஸ்ட் மாட்ச் நடைபெற முன்னேற்பாடுகள் பற்றிச் சில ருசிகரமான தகவல்கள்.

★




படங்கள்:
மேலே: ஸ்கோர் போர்ட் தயாராகிறது
கீழே: டிக்கெட்டுகளுக்கு ஏக கிராக்கி

கிரிக்கெட் டெஸ்ட் விளையாட்டுக்கும் பொங்கல் கரும்புக்கும்தான் சென்னையைப் பொறுத்த வரை சம்பந்தம் என்று நினைத்திருப்பவர்கள் இனி தங்கள் அபிப்பிராயத்தை மாற்றிக் கொள்ள வேண்டும்! இந்த ஆண்டில் கிறிஸ்துமஸுக்கும் கிரிக்கெட் டெஸ்ட் மாட்சுக்கும் உறவை ஏற்படுத்தி யிருக்கிறார்கள் கிரிக்கெட் ஆட்ட நிர்வாகிகள். பாரதமும், ஆஸ்திரேலியாவும் பங்கு கொள்ளும் கடைசி டெஸ்ட் மாட்ச், வழக்கத்துக்கு மாறாக இந்த டிசம்பர் மாதம் இருபத்தி நான்காம் தேதியன்றே சென்னை சேப்பாக்கம் மைதானத்தில் தொடங்குகிறது: ஆறு நாட்கள் நடக்கவிருக்கிறது.

முன்பெல்லாம் சேப்பாக்கத்தில்தான் கிரிக்கெட் போட்டிகள் நடக்கும். இடையே நகர சபை நேரு ஸ்டேடியம் நிர்மாணிக்கப்பட்டதும் அங்கே இந்த விளையாட்டை நடத்திப் பார்க்க முன்வந்தார்கள், கிரிக்கெட் சங்க நிர்வாகிகள். அந்த ஸ்டேடியத்தை உபயோகித்துக் கொள்ள, மொத்த டிக்கெட் விற்பனை வசூலில், முதல் லட்ச ரூபாயில், பத்து சதவிகிதமும், இரண்டாவது லட்சத்தில் பதினைந்து சதவிகிதமும், மூன்றாவது லட்சத்துக்கும் அதற்கு மேலும் வசூலாகும் பணத்தில் பன்னிரண்டு சதவிகிதமும், கொடுக்க வேண்டியிருந்தது. 1967 ஜனவரி மாதத்தில் மேற்கு இந்திய கோஷ்டியினர் வந்த சமயத்திலிருந்து மறுபடியும் இந்த ஆட்டம் சேப்பாக்கத்துக்கு வந்துவிட்டது. சேப்பாக்க மைதானம் சென்னை கிரிக்கெட் சங்கத்துக்குச் சொந்தமானது.

நேரு ஸ்டேடியத்தில் உள்ள பந்து வீசும் இடத்துக்கும் (Pitch) சேப்பாக்கத்தில் உள்ள பிட்சுக்கும் வித்தியாசம் உண்டு. முந்தியது பந்தை அடிப்பவர்களுக்கு மாத்திரமே சாதகமானது. பிந்தியது பந்து அடிப்பவருக்கும், வீசுபவருக்கும் எதிர்பாராமல் சாதக பாதகங்களைத் தோற்றுவித்து விளையாட்டில் சுவாரசியத்தை ஏற்படுத்தக் கூடியது.

நேரு ஸ்டேடியத்தில் கிரிக்கெட் ஆட்ட காலத்தில் பல்வேறு பிரிவுகளுக்கு இடம் பிரித்து ஆசனங்கள் போட்டால் மொத்தம் இருபத்தி எட்டாயிரம் பேருக்கு இடம் இருக்கும்.

சேப்பாக்கம் மைதானத்தில் இந்த ஆண்டு முப்பத்தி இரண்டாயிரம் பார்வையாளர்களுக்கு இட வசதி செய்திருக்கிறார்கள். மேற்கு இந்திய கோஷ்டியினர் 1967 ஜனவரியில் வந்தபோது செய்த ஏற்பாட்டை விட இந்த ஆண்டு சுமார் மூவாயிரம் கூடுதலான ஆசனங்களுக்கு வசதி செய்யப்பட்டிருக்கிறது.

சேப்பாக்கம் மைதானத்தில், மரப் பலகைகளினாலான தாற்காலிக காலரிகள் நிறுவ, சென்னை கிரிக்கெட் சங்கம் ஒரு லட்சத்து ஐம்பதினாயிரம் ரூபாய்க்கு மேலேயே செலவழித்திருக்கிறது. மேற்கு இந்திய கோஷ்டியினர் விஜயத்தின்போது இந்த



ஏற்பாட்டைக் குத்தகைக்கு எடுத்திருந்த ராமச்சந்திர நாடாரே இந்தத் தடவையும் குத்தகை எடுத்திருக்கிறார். ஆயிரக்கணக்கான ரசிகர்கள் பயமில்லாமல் இந்தக் காலரிகளில் அமரும் வண்ணம், கவனத்துடன் இந்தக் காலரிகளை அமைத்திருக்கிறார்.

சேப்பாக்கம் மைதானத்தில் ஒரு நிரந்தரமான கிரிக்கெட் ஸ்டேடியத்தைக் கட்டி முடிக்கச் சென்னை கிரிக்கெட் சங்கத் தலைவர் திரு எம். ஏ. சிதம்பரம் தீவிர முயற்சிகள் மேற்கொண்டிருக்கிறார். இதன் உத்தேசச் செலவு அறுபது லட்சம் ரூபாய்.

சென்னையில் இந்த ஆஸ்திரேலிய மாட்ச் நடப்பதற்காக, சென்னை கிரிக்கெட் சங்கம் மத்திய கிரிக்கெட் சங்கத்துக்குக் கொடுக்க வேண்டிய உத்தரவாதத் (காரண்டி.) தொகை நான்கு லட்சம் ரூபாய். மைதானத்தில் ஆசன ஏற்பாடுகள், தண்ணீர் ஏற்பாடு, பந்தோபஸ்து இவைகளுக்குச் செலவழிக்கும் தொகை இரண்டு லட்சம். மற்ற செலவுகள் இரண்டு லட்சம். இதற்குமேல் அதிகப்படியாகக் கிடைக்கும் தொகைதான் சென்னை கிரிக்கெட் சங்கத்துக்குச் சேரும்.

முப்பத்தி இரண்டாயிரம் ஆசனங்களுக்கான பல பிரிவு சீசன் டிக்கெட்டுகளும் ஏற்கனவே விற்றுப் போய் விட்டன. சென்னை கிரிக்கெட் சங்கத்துக்கு நேரில் போனாலோ அல்லது டெலிபோன் போட்டாலோ 'டிக்கட் இல்லை' என்றே பேச்சை ஆரம்பிக்கிறார்கள். தினசரி டிக்கெட்டுகள் இந்தத் தடவை கிடையாது. சீசன் டிக்கெட் கிடைக்காதவர்களும் என்றாவது ஒரு நாள் போய்ப் பார்க்கலாம் என்று நினைத்தவர்களும் ஏமாற்றத்துக்கு ஆளாகியிருக்கிறார்கள்.

''இருக்கவே இருக்கிறது ரேடியோ ரன்னிங் காமெண்டரி'' என்று ஆறுதல் கூறுவோம்!

— பட்டினத்தார்




ஐஸ்கிரீம் கோனுக்கு இருபுறமும் உள்ள 69 என்ற எண்களுக்குள் '69ம் ஆண்டு காலண்டர் முழுதும் உள்ளது. ஹிப்பிகள் பிரபலப்படுத்திய சைகடெலிக் ஓவியங்கள் இன்று அமெரிக்காவில் மிகுதி.

படங்கள் சென்னை, அமெரிக்கத் தகவல் நிலையத்தில் நடக்கும் சைகடெலிக் கலை என்ற கண்காட்சியிலிருந்து.

## யானையின் எடை

முன்னொரு காலத்தில் ஜப்பானிய அரசர் ஒருவருக்கு ஒரு யானை பரிசாக வந்தது. அதுவரையில் யானையைப் பற்றி அவர்கள் யாருமே அறிந்திருக்கவில்லை. எனவே எல்லோரும் அதிசயமாகக் கூட்டம் கூடி அம்மிருகத்தைக் கண்டனர். அரசருக்கும் அளவு கடந்த ஆனந்தம். யானையைச் சுற்றிச் சுற்றி வந்த அரசருக்குத் திடீரென்று அதன் எடை என்னவாக இருக்கும் என்று பார்க்க ஆவல் எழுந்தது. அரசாங்க ஊழியர்களை நோக்கி ''யானையின் எடையைக் கண்டு சொல்லுங்கள்'' என்று உத்தரவிட்டார் அரசர்.



அரசாங்க ஊழியர்கள் கைகளைப் பிசைந்தார்கள். அவ்வளவு பெரிய மிருகத்தின் எடையை அறியக் கூடிய கருவிகள் ஏதும் அந்தக் காலத்தில் இல்லை. எனவே, அரசரிடம் சென்று தங்கள் இயலாமையைத் தெரிவித்தனர்.

உடனே அரசர் ''யாராவது இம்மிருகத்தின் எடையைக் கண்டுபிடித்தால் அவர்களுக்கு உயர்ந்த பரிசளிக்கப்படும்'' என்று நாடு முழுவதும் தண்டோராப் போடச் சொன்னார்.

ஒரு நாள் அரண்மனைக்கு வந்தான் ஒரு சிறுவன். யானையின் எடையைத் தான் கண்டுபிடிப்பதாக அவன் கூறியதைக் கேட்டதும் அரண்மனை ஊழியர்களுக்கு வியப்பு ஏற்பட்டது.

பெரிய கூட்டம் கூடியது. சிறிய பையன் என்ன செய்யப் போகிறான் என்பதைக் காண எல்லோருக்கும் பரபரப்பு மேலிட்டது. பையன் யானையைத் தாங்கக் கூடிய அளவுக்கு வலுவான ஒரு படகு கொண்டுவரச் சொன்னான். பின்பு யானையை நதிக் கரைக்கு அழைத்துச் சென்றான். ஆற்றில் மிதந்த காலிப் படகில் யானையை ஏற்றினான். யானையின் கனம் தாளாது படகு நீரில் நன்கு அமிழ்ந்தது. பையன் உடனே படகு நீரில் அமிழ்ந்த இடத்தைக் குறியிட்டுக் கொண்டான். பின்பு யானையைப் படகிலிருந்து இறக்கி விட்டு, ''இதோ இந்தப் படகில் நான் குறியிட்ட அளவுவரை கற்களை நிரப்புங்கள். பின்பு கற்களையெல்லாம் எடுத்து அவற்றின் மொத்த எடையைக் கண்டு பிடியுங்கள். அதுவே இந்தப் பெரிய மிருகத்தின் எடையுமாகும்'' என்று கூறினான் பையன். பையனின் சாமர்த்தியம் கண்டு கூட்டம் ஆரவாரம் செய்தது. தகுந்த பரிசும் பெற்றான் அவன்.

(ஜப்பானிய நாடோடிக் கதை)

அனுப்பியவர்: ராஜாமணி



# சிறு தொழிலுக்கும்
# எம்.ஐ.ஐ.ஸி. நிதியுதவி!

சிறு தொழில்களுக்கு எம். ஐ. ஐ. ஸி. அளிக்கும் கவர்ச்சியான உதவியின் முக்கிய அம்சங்கள்:-

- சொத்து மதிப்பீட்டில் 75% உதவி
- வருட வட்டி 7.5% மட்டுமே
- திருப்பித்தர எட்டுவருட காலம்.
- இருவருட விடுமுறையும் கூட!
- கடன்களுக்கு குறைந்த பட்ச தொகை ரூ. 50,000/-

நிலம், கட்டிடம், இயந்திர சாதனங்கள் முதலியன போன்ற தங்களது ஸ்திர ஆஸ்திகளை பெருக்கிக் கொள்வதற்காக மேற்கண்ட கவர்ச்சிகரமான சலுகைகளை எம். ஐ. ஐ. ஸி. சிறுதொழில்களுக்கு வழங்குகிறது.

**MIIC** மதராஸ் இண்டஸ்ட்ரியல் இன்வெஸ்ட்மெண்ட் கார்பொரேஷன் லிமிடெட்.

எல். எல். ஏ. கட்டிடம், 150-A, மவுண்ட் ரோடு, சென்னை-2.
கிளை: 1231, தெற்கு மெயின் தெரு, தஞ்சாவூர்.

Criterion MIIC 2015 TM

# ராமாயணம்

## ராஜாஜி

## 41. பரதன் திரும்பினான்

நான்கு அரச குமாரர்களும் மூன்று பட்டமகிஷிகளும் ஓர் இடத்தில் மறுபடியும் கூடிவிட்டார்கள் என்ற செய்தி அறிந்தவுடனே, தூரத்தில் மரியாதைக்காக நின்று கொண்டிருந்த படையினரும் ஜனங்களும் உடனே அந்தச் சந்தோஷக் காட்சியைப் பார்க்க ஓடிவந்து விட்டார்கள். ஒரே மகிழ்ச்சி ஆரவாரம். இனி ராமன் அயோத்திக்குத் திரும்பி விடுவான் என்றே நிச்சயித்துக் கொண்டு குதூகலப்பட்டார்கள். ஒருவரையொருவர் ஆலிங்கனம் செய்து கொண்டு மங்களம் கொண்டாடினார்கள்.

மகாராஜாவும் தந்தையுமான தசரதன் இவ்வுலகம் துறந்து விட்டானே என்று சீதையும் ராம லக்ஷ்மணர்களும் துக்கக் கடலில் மூழ்கியிருந்தார்கள். ஆனால் ஜனக்கூட்டத்தில் ராம தரிசனத்தினால் பெருத்த மகிழ்ச்சி பொங்கிற்று.

* * *

வசிஷ்ட முனிவர் தேவிமார்களைப் பர்ணசாலைக்கு அழைத்துச் சென்றார். வழியில் மந்தாகினி நதியைப் பார்த்தார்கள். "இந்தத் துறையில் இறங்கித்தான் இராஜ குமாரர்கள் தங்களுக்கு வேண்டிய தண்ணீர் எடுத்துப் போவார்கள்" என்று ஓர் இடத்தைக் காட்டியதும், கௌசல்யா தேவியும் சுமித்திரையும் 'ஐயோ' என்று அழுதார்கள்.

"சுமித்திரையே, என் மகனுக்காக இந்தத் துறையில் தினமும் உன் மகன் ஆற்றில் இறங்கிச் சுத்தமான ஜலம் ஆசிரமத்துக்கு எடுத்துப் போய் வைக்கிறான் பார்த்தாயா? அண்ணனுக்காக எந்த வேலையும் சந்தோஷமாகச் செய்வான் உன் மகன். குடத்தில் ஜலத்தை நிரப்பித் தோளின் மேல் வைத்து எடுத்துப் போவது அவனுக்குக் கஷ்டமாகத் தோன்றாது" என்றாள்.

ஆற்றங்கரையில் ராம லக்ஷ்மணர்கள் தந்தைக்காக ஜலக்கிரியை செய்த இடத்தைப் பார்த்தார்கள். தர்ப்பைப் புல் நுனி தெற்கு நோக்கி வைத்திருப்பதைக் கண்டார்கள். பித்ருக்களுக்காக அங்கே எள்ளுப் பிண்ணாக்கு வைத்திருப்பதையும் கண்டார்கள்.

"மகாராஜாவின் பசி தீர்ப்பதற்காகப் பிண்ணாக்கு வைத்திருப்பதைப் பார்த்தாயா? ஆகா, இறந்த பின், உலகம் ஆண்ட ராஜாக்களின் போஜனம் இதுவே. என் இதயம் வெடிக்கவில்லையே!" என்று சுமித்திரையை அணைத்துக் கொண்டு அழுதாள் கௌசல்யா தேவி.

பர்ணசாலைக்குப் போய்ச் சேர்ந்தார்கள். அங்கே முகத்தில் தெய்விக ஒளி வீசும் ராஜ குமாரர்கள் ஓலைக் குடிசையில் உட்கார்ந்திருப்பதைக் கண்டார்கள். அந்தக் காட்சியைப் பார்த்து நிற்கச் சக்தி இழந்து கீழே விழுந்தார்கள்.

இரு ராஜகுமாரர்களும் எழுந்து தாய்மார்களைத் தூக்கி எடுத்தார்கள். தன்னுடைய தாமரைக் கைகளால் கோசலை ராமனைத் தடவிக் கொடுத்து இது துக்கமோ ஆனந்தமோ என்பதை அறியாமல் மயக்கத்தில் மூழ்கினாள். பிறகு சீதையைத் தழுவி, "மகளே, ஜனகனுக்கு மகளாய்ப் பிறந்து, அயோத்தி மன்னனுக்கு மருமகளாக என் வீட்டில் புகுந்த நீ, இந்தக் காட்டில், இந்தக் குடிசையில் வசித்து வருகிறாயா? வாடிய தாமரை மலரே! தூசி படிந்த தங்க விக்கிரகமே! உன்னைப் பார்த்து நான் படும் துக்கத்தை எப்படிச் சொல்வேன்? நெருப்பில் எரியும் விறகு போல் என் மனம் எரிகிறது, குழந்தாய்!" என்றாள்.

மண்ணின் மேல் நின்ற பிரகஸ்பதியைப் போல் விளங்கும் வசிஷ்டருடைய பாதங்களில் சக்கரவர்த்தித் திருமகன் விழுந்து வணங்கி அவருக்கு அருகில் அன்புடன் உட்கார்ந்தான். பரதனும் அடக்கமே வடிவமெடுத்து வந்ததுபோல் ராமசந்திரன் எதிரில் உட்கார்ந்தான். பல பெரியோர்களும் சுற்றி

உட்கார்ந்திருந்தார்கள். ராமனுடைய மனம் மாறுமா? பரதன் என்ன பேசப் போகிறான் என்றெல்லாம் ஆவலோடு எதிர்பார்த்து உட்கார்ந்தார்கள்.

''பரதனே! எதற்காக இந்த உடை தரித்துக் கொண்டு வனத்துக்கு வந்தாய்? சொல்! ராஜ்ய பரிபாலன காரியங்களை விட்டு விட்டு மான் தோலும் சடையுமாக ஏன் இங்கே வந்து சேர்ந்தாய்? இதை எனக்குச் சரியாகச் சொல், தம்பி!'' என்றான்.

''அண்ணா!'' என்று பரதன் பல தடவை சொல்ல ஆரம்பித்து மேலே பேச்சு வராமல், திக்கித் திணறினான். பிறகு தைரியம் செய்து கொண்டு மெள்ளப் பேச ஆரம்பித்தான்:

''உன்னைக் காட்டுக்கு அனுப்பிவிட்டு 'யாரும் செய்யத் துணியாத காரியத்தைச் செய்து விட்டேனே' என்ற துக்கத்தில் வெந்து, மேலுலகம் போய்விட்டார் தந்தை. என்னைப் பெற்றவளும் தான் விரும்பிய சந்தோஷத்தைப் பெற முடியாமல், மகா பாவம் செய்தவளாகி விதவையுமாகி, சோகத்தில் மூழ்கி நிற்கிறாள். உலகத்தால் பழிக்கப்பட்டு, உயிருடன் நரக வேதனையடைந்திருக்கிறாள். எங்களை நீ காப்பாற்ற வேண்டும். இன்றே நீ பட்டாபிஷேகத்துக்குச் சம்மதித்து உனக்குரிய ராஜ்யத்தை அடைய வேண்டும். இதற்காகவே ராஜ்யத்துப் பொதுமக்களும், சேனையும், சுவர்க்கம் எய்திய அரசனுடைய தேவிமார்களும் எல்லாரும் இங்கே வந்து காத்திருக்கிறார்கள். நீ இதை அருள வேண்டும். மறுக்கக் கூடாது. இதுவே அனைவருடைய துக்கத்தையும் தீர்த்து, குல தருமத்தையும் கெடாமல் காப்பாற்றும். உரிய அரசனில்லாமல் ராஜ்யம் ஒரு விதவையின் நிலையில் இருக்கிறது. அதை அகற்றி மங்களகரமாக்கக் கடவாய்! பூரண சந்திரனைப் போல் இருளை அகற்றி, நாட்டை ஜொலிக்கச் செய்வாய். இதோ மந்திரிகள் இருக்கிறார்கள். அவர்களும் நானும் உன் பாதங்களில் விழுந்து வணங்கிக் கேட்டுக் கொள்கிறோம். அண்ணா! இந்தப் பிரார்த்தனையை மறுத்துத் தள்ளி விடாதே!''

இப்படிச் சொல்லி ராமசந்திரனுடைய காலைப் பிடித்துக்கொண்டான். தீரனான பரதன் கண்களில் நீர் ததும்பியது.

பரதனைத் தழுவி யெடுத்து ராமன் சொல்லுகிறான்:

''அப்பனே! நாம் நற்குலத்தில் பிறந்தோம். நல்ல முறையில் வளர்க்கப்பட்



டோம். நீயும் நானும் ஒரு நாளும் தவறு செய்ய மாட்டோம். உன்னிடத்தில் எள்ளளவேனும் நான் குற்றங் காணவில்லை. நீ துக்கப்பட வேண்டாம். பெற்ற தாயையும் நீ குற்றம் கூற வேண்டாம். நம்முடைய பண்பாட்டுக்கு இது தகாது. நம்மைப் பெற்ற தந்தை நமக்கு எந்த ஆணையும் இடலாம். அது அவருடைய உரிமை. வனத்துக்கு அனுப்புவதும், ராஜ்யாபிஷேகம் செய்வதும் இரண்டும் அவருடைய உரிமை. தாயையும் தந்தையையும் கௌரவிப்பது புதல்வர்களாகிய நம்முடைய கடமை. அவர்கள் இருவரும் எனக்கு இட்ட ஆணையை நான் ஒப்புக் கொள்ளாமல் இருக்க முடியுமா? 'வனம் போ' என்று தந்தை சொன்னதை நான் மறுப்பது தருமமா? உனக்கு ராஜ்யப் பொறுப்பைத் தந்தார். எனக்கு வனவாசம் தந்தார். இப்படி நம்மிருவருக்கும் வாழ்க்கையை வகுத்துக் கொடுத்து மரணமடைந்தார். அதை நாம் புறக்கணிக்கலாகாது. நீ ராஜ்ய பரிபாலனம் செய்து அவர் ஆணையை நிறைவேற்றுவதில் ஒரு குற்றமும் இல்லை. அது உன் கடமையுமாகும். நானும் பதினான்கு வருஷங்கள் தண்டகாரண்யத்தில் தந்தையின் அந்திமக் கட்டளையை நிறைவேற்றுவேன். அதுவே தருமம். தேவராஜனுக்குச் சமமாக இருந்த நம்முடைய தந்தை சொன்னதை நாம் பக்தியுடன் செய்து தீர்க்க வேண்டும். தகப்பனார் ஆணையை நிறைவேற்ற இயலாமல் அதற்குப் பதில் உலகமெல்லாம் எனக்குக் கிடைப்பதானாலும் அதைப் பெற்றுக் கொண்டு நான் திருப்தி யடைய முடியாது'' என்றான் ராமன்.

இதைக் கேட்ட பிறகும் பரதன் மீண்டும் மீண்டும் ராமனைக் கேட்டுக்கொண்டான். தன்னைக் குறித்து வந்த அனர்த்தம், அது திருத்தப்படாமல் போனால் தன்னுடைய பாபம் தீராமல் நின்று போகும் என்று பரதன் வருத்தப்படுகிறான் என்பதைக் கண்டு ராமன்,

''நீ உன்னை நிந்தித்துக் கொள்ள வேண்டாம். உன் பொருட்டு இது நடந்து விட்டது என்று எண்ண வேண்டாம். அனைத்துக்கும் விதியே காரணம். துக்கத்தை விடு. அயோத்தியைக்குத் திரும்பிப் போய் ராஜ்ய பரிபாலனம் செய். நம்முடைய தந்தை சொன்னபடி நாம் இருவரும் நடக்க வேண்டும். அவருடைய கட்டளையை நாம் நிராகரித்தல் தகாது. உன்னிடத்தில் ஒப்புவித்த ராஜ்ய பாரத்தை நீ தாங்கியே தீர வேண்டும்'' என்றான்.

பரதனுடன் வந்த அயோத்தி நகரத்து மக்களுக்குச் சக்கரவர்த்தித் திருமகனுடைய உறுதியைப் பார்த்து ஒரு பக்கம் மகிழ்ச்சியும் ஒரு பக்கம் துக்கமும் உண்டாயிற்று. பரதனுடைய அன்பையும் பக்தியையும் களங்கமற்ற உள்ளத்தையும் பார்த்துப் பார்த்து, 'இத்தகைய ராஜ குமாரர்களைப் பெற்றோமே நாம்' என்று மகிழ்ந்தார்கள்.

• • •

''தந்தையின் சொல்லை நான் புறக்கணிக்க முடியாது. வீணாக முயற்சி செய்யாதே! உனக்கு உதவியாகச் சிறந்த தம்பி சத்ருக்கனன் இருக்கிறான். எனக்கும் இங்கே ஒரு தம்பி இருக்கிறான். லக்ஷ்மணன் இருக்க எனக்கு என்ன குறை? நான்கு புத்திரர்களாகிய நாம் நம் தந்தையின் ஆணையைச் சரிவர நிறைவேற்றுவோம்'' என்று ராமன் முடிவாகப் பரதனுக்குச் சொன்னான்.

பரதனுடன் வந்த புரோகிதக் கூட்டத்தில் ஒருவரா யிருந்த மகா வித்துவான் ஜாபாலர் இந்தச் சமயத்தில் நடுவில் புகுந்து ராமசந்திரனுக்கு லோகாயதம் உபதேசித்தார். ''தந்தையின் ஆணை என்று திரும்பத் திரும்ப ஏதோ சொல்லுகிறாய். தசரதன் என்பது ஓர் உடல். அது பஞ்சத்துவம் அடைந்து விட்டது. ஐம்பெரும் பூதங்களோடு கலந்து போய்விட்டது. முடிந்துபோன அந்த உருவத்துக்கும் உனக்கும் இப்போது ஏதோ சம்பந்தம் இருப்பதுபோல் பேசுகிறாய். இது அறியாமை. கண்ணெதிரிலுள்ள சுகங்களை விட்டு விட்டுத் தருமம் என்றும் பரலோகம் என்றும் மூடர்களுடைய பேச்சை நீயும் பேசுகிறாய். துயரத்தில் மூழ்கிக் கூந்தலை வாரி எடுத்துக் கட்டாமல் இருக்கும் ஒரு ஸ்திரீயைப்போல் அயோத்தி நகரம் துக்கத்தில் கிடக்கிறது. உனக்காகக் காத்துக் கொண்டிருக்கிறது. போய்ப் பட்டாபிஷேகம் செய்து கொண்டு சுகங்களை அனுபவித்துச் சந்தோஷமாய் இருப்பாய். பரதன் சொல்லுவதைக் கேள்! தந்தையின் கட்டளை என்று சொல்லிக்கொண்டு செய்ய வேண்டியதைச் செய்யாமல் இருக்கிறாய்'' என்று கூறினார்.

ராமனுக்கு ஜாபாலி சொன்னது மிகுந்த அதிருப்தியை உண்டாக்கிற்று. ''சத்தியத்தை நீர் ஒரு பொருளாக மதிக்கவில்லை போலும். நீர் சொல்லுவது சரியாக இல்லை. நாஸ்திகம் பேசுகிறீர். சத்தியத்தை விட மேலான ஒரு பொருள் உலகத்தில் இல்லை'' என்றான் ராமன்.

(தொடரும்)

இருமலா?
**க்ளைகோடின்**
சாப்பிட்டதும் போய்விட்டதே!



சற்று முன்புதான் அவள் இருமலால் தவித்துக் கொண்டிருந்தாள் என்றால் நம்புவீர்களா? பிறகு க்ளைகோடின் சாப்பிட்டாள். க்ளைகோடின் அவள் இருமலை வெகுசீக்கிரம் பூரணமாக நிறுத்திவிட்டது.

**பூரண இருமல் கட்டுப்பாட்டுக்கு க்ளைகோடினுக்கு இணை எதுவுமில்லை!**



அவளுடைய கடுமையான இருமலை க்ளைகோடின் வெகுசீக்கிரம், பரிபூரணமாக நிறுத்தியது.

- மூளையில்—இருமல் கேந்திரத்தைக் கட்டுப்படுத்துகிறது
- தொண்டையில்—சளி அடைப்பை அகற்றி எரிச்சலைச் சமனப்படுத்துகிறது
- மார்பில்—இறுகிய தசைநார்களுக்கு இதமளித்து சுலபமாக சுவாசிக்க உதவுகிறது
- நுரையீரல்களில்—அடைத்துக் கொண்டிருக்கும் கோழையைத் தளர்த்தி சளியை வெளியேற்றுகிறது






**க்ளைகோடின்**
**டெர்ப் வசாகா**
இருமல்களுக்கு, மிக அதிகமாக விற்பனையாகும் நம்பகமான வீட்டு நிவாரணி

everest/659c/ACW/tm

"இந்த வாத்தியார் வேலையை விட்டொழித்து விட்டு வேறு ஏதாவது நல்ல உத்தியோகம் கிடைத்தால் போய்விடலாம்."

துரதிர்ஷ்டவசமாக இந்தப் பேச்சு தமிழ் நாட்டில் இன்னும் பல சந்தர்ப்பங்களில் நம் காதில் விழத்தான் செய்கிறது.

ஆனால் திரு கே. ஜி. கிருஷ்ணமூர்த்தி விஷயம் இதற்கு நேர்மாறானது.

1946 முதல் 1948 வரை இந்தியன் ஓவர்சீஸ் பாங்கின் ஸ்பெஷல் கேடர் அஸிஸ்டெண்டாகப் பணி புரிந்த இவருக்கு அதில் மனத்துக்கு நிம்மதி இல்லாததால் ஆசிரியராகப் போக வேண்டும் என்ற கொள்ளை ஆசை ஏற்பட்டது. ஆசிரியர் பயிற்சிப் பள்ளியில் சேர்ந்து — படித்துப் பட்டம் பெற்று ஆசிரியரானார். உழைப்பு — திறமை இவை மூலம் கும்பகோணம் பாணாதுறை உயர்நிலைப் பள்ளிக்குத் தலைமை ஆசிரியரானார்.

"போன ஜன்மத்தில் புண்ணியம் செய்திருந்தால்தான் ஆசிரியராக வரமுடியும்" என்கிறார் இவர்.



# பண்பாட்டுக்கு ஒரு பள்ளிக்கூடம்



ஆண்களும் பெண்களுமாக ஆயிரத்து அறுநூறு மாணவர்கள் படிக்கும் பாணாதுறை உயர்நிலைப் பள்ளியில் நாம் நுழைந்ததும் நம் கவனத்தைக் கவர்வது நிசப்தம். அப்பாடி! சந்திர மண்டலத்தில் நிலவுவதாகக் கூறப்படும் அத்தனை அமைதி இங்கே எப்படி வந்தது என்று அதிசயிக்கிறோம்!

"பள்ளிக்கூட நாட்களில் தினமும் பிரார்த்தனையின்பொழுது ஒரு மாணவன் அல்லது மாணவி ஒரு திருக்குறள் சொல்லி விளக்க வேண்டும்" என்ற நல்ல பழக்கத்தைத் தலைமை ஆசிரியர் கே. ஜி. கிருஷ்ணமூர்த்தி ஏற்படுத்தியிருக்கிறார்.

தலைமை ஆசிரியரும் மற்ற ஆசிரியர்களும் அடிக்கடி பிள்ளைகள் வீட்டுக்குச் சென்று பெற்றோர்களிடம் பிள்ளையின் முன்னேற்றம் அல்லது தேக்கம் பற்றிப் பேசுகிறார்கள். படிப்புக்கு இடைஞ்சலாக வீட்டில் ஏதாவது சூழ்நிலை இருக்கிறதா என்று ஆராய்கிறார்கள். "மாணவர்களுக்கும் ஆசிரியர்களுக்கும் உள்ள தொடர்பு குளிர்காயத் தணலுக்கு அருகில் இருப்பதைப் போல் இருக்க வேண்டும். அதிகமாக நெருங்கி விட்டால் சுட்டு விடும். வெகுதூரம் ஒதுங்கி விட்டால் குளிரும்." — இப்படிக் கூறுகிறார் திரு கிருஷ்ணமூர்த்தி.

"நாங்கள் சினிமாவுக்குப் போக மாட்டோம்" — இது இந்தப் பள்ளி மாணவ மாணவிகள் கொடுத்துள்ள உறுதிமொழி! பன்

---

படங்கள் - மேலே : திரு கிருஷ்ணமூர்த்தி
கீழே : பாணாதுறைப் பள்ளி ஆசிரியர் குழாம்.



## பாரதி அன்றே எழுதினர்!

(இடம்: கடற்கரை. நேரம்: நள்ளிரா; முழு நிலாப் பொழுது. இரண்டு பாம்புகள் ஒரு பாலத்தடியே இருட் புதரினின்றும் வெளிப்பட்டு நிலா வீசி ஒளிரும் மணல் மீது வருகின்றன.)

ஆண் பாம்பு: உன்னுடன் கூடி வாழ்வதில் எனக்கு இன்பமில்லை. உன்னால் என் வாழ்நாள் விஷமய மாகிறது. உன்னலேதான் என் மனம் எப்போதும் அனலில் பட்ட புழுவைப்போலத் துடித்துக் கொண்டிருக்கிறது.

பெண் பாம்பு: உன்னுடன் கூடி வாழ்வதில் எனக்கின்பமில்லை. உன்னால் எனது வாழ்நாள் நரகமாகிறது. உன்னால் என் மனம் தழலிற் பட்ட புழுவைப் போல் துடித்துக் கொண்டிருக்கிறது.

ஆண் பாம்பு: நான் உன்னைப் பகைக்கிறேன்.

பெண் பாம்பு: நான் உன்னை விரோதிக்கிறேன்.

ஆண் பாம்பு: நான் உன்னைக் கொல்லப்போகிறேன்.

பெண் பாம்பு: நான் உன்னைக் கொல்லப் போகிறேன்.

ஒன்றையொன்று கடித்துக் கொண்டு இரண்டு பாம்புகளும் மடிகின்றன.

-மகாகவி பாரதியாரின் ஜகத் சித்திரம் (வசன கவிதை) - நான்காம் காட்சி.

**புது உரை:**

இருட் புதர்: கம்யூனிஸம், சோஷலிஸம்.
நிலா வீசி ஒளிரும் மணல்: பாரத சமுதாயம்.
ஆண் பாம்பு: காங்கிரஸ் எதிர்க் கட்சி
பெண் பாம்பு: ஆளும் காங்கிரஸ் கட்சி.
பகைக்கிறேன்: டிஸ்மிஸ் செய்கிறேன்.
விரோதிக்கிறேன்: பதவி நீக்கம் செய்கிறேன்.

அனுப்பியவர்: ப. ந. ஸ்ரீதரன்



"இந்தப் போட்டோகிராபருக்கு எப்போதும் ஞாபகமறதிதான்!"

ளிக்கூடத்தில் பரிசோதனைச் சாலையும் உபகரணங்களும் இல்லாதது பெரிய குறை தான். அப்படியும் இந்த வருஷம் பள்ளி இறுதி ஆண்டுத் தேர்வில் ரசாயனத்தில் 83 சத விதம் மார்க்குக்குக் குறையாமல் மாணவ மாணவியர் வாங்கி யிருக்கிறார்கள். இதற்குக் காரணம் கே. ஆர். சுப்பிரமணியம் பி. ஏ., பி. எஸ்ஸி., பி. டி.

இருப்பனந்தாள் மடம் நடத்தும் அபிராம அந்தாதி, கந்தர் கலிவெண்பா, நீதி நெறி விளக்கம் ஆகிய போட்டிகளில் கும்ப கோணம் நகரில் உள்ள பள்ளிகளுள் இந்தப் பள்ளிக்கே ஆண்டுதோறும் வெற்றி கிடைத்து வருகிறது. எத்தனை வருடங்களாக? பத்தொன் பது வருடங்களாகத் தொடர்ந்து வெற்றி தான். தமிழ் ஆசிரியர் ஏ. வைத்தியநாதய்யர் தான் காரணம்.

எந்தப் பள்ளிக்கூடத்துக்கும் இல்லாத இன்னொரு சிறப்பு இந்தப் பள்ளிக்கூடத் துக்கு உண்டு. என்ன? ஆறேகால் ஏக்கர் மைதானம் - மழை பெய்தால் தண்ணீர் தங்காத சம தளமான மைதானம் இருக் கிறது. பிரதமரின் வெள்ளிப் பதக்கம் பெற் றது இந்தப் பள்ளிக்கூடம். எப்படிக் கிடைத்தது ?

சீனப் படையெடுப்பின் பொழுது ஜவான் குடும்பங்களுக்கு வேண்டிய உதவிகளைச் செய்ததற்காக 1965இல் லால்பஹாதூர் சாஸ்திரி சமூக சேவைக் குழுவின் காரியதரிசி பள்ளி மாணவன் ஸ்ரீ சந்திரசேகரனுக்கு வெள்ளிப் பதக்கம் அளித்துப் பாராட்டினர்.

சில வருடங்களுக்கு முன்பு இந்தப் பள்ளி யில் படித்துக் கொண்டிருந்த மாணவன் ஜெயபாலன், இருதய நோயால் பாதிக்கப் பட்டுப் படுத்த படுக்கையில் இருந்த பொழுது, "உடல்நிலை சரியானபிறகு உன் வீட்டுக்குப் பக்கத்தில் உள்ள பள்ளியில் படி" என்று தலைமை ஆசிரியர் கூறினர். இதய நோயுடன் இருந்த அவன் அதிக தூரம் நடந்து சிரமப்பட வேண்டாம் என்ற கருத்தில் இப்படிச் சொன்னர். பளிச் சென்று பதில் வந்தது. "எவ்வளவு தூரம் இருந்தாலும் நீங்கள் இருக்கும் பள்ளிக் கூடத்தில்தான் படிப்பேன்." இதற்குச் சில நாட்களுக்குப் பிறகு ஜெயபாலனின் உடல் நிலை மேலும் மோசமாகி விட்டது. உயிர் பிரியும் தருணத்தில் ஜெயபாலன் என்ன விரும்பிக் கேட்டான் தெரியுமா? தன் பள்ளிக்கூடத்தின் தலைமை ஆசிரியரைப் பார்க்க வேண்டும் என்று பெற்றோரிடம் தெரிவித்தான்!

இன்னும் இரண்டு வருடங்களில் பள்ளிக்கு நூற்றாண்டு விழாவைச் சிறப்பாகக் கொண் டாடவிருக்கிறார்கள்.

இங்கு வேலை பார்க்கும் ஆசிரியர்கள் பதவி உயர்வு கிடைத்தாலும்கூட வேறு பள்ளிக்கூடத்துக்குப் பணி புரியப் போவ தில்லை. ஆசிரியையாகப் பணி புரியும் ஸ்ரீமதி கே. மீனாட்சிக்கு உள்ளூர் பாடசாலை ஒன்றில் தலைமை ஆசிரியையாகப் பணி புரியுமாறு அழைப்பு வந்தது. மறுத்து விட்டார்!

பாடத்தோடு நல்ல பண்பாட்டையும் பரிந்து பரிந்து ஊட்டுகிறது பாணாதுறை உயர்நிலைப் பள்ளி. —"அன்பு"



இவன் தான் மில்பர்ன்.
அமுல்ஸ்ப்ரே புகட்டத்
தொடங்கியபோது, அவன்
ஒரு மாதக் குழந்தை.

# இப்பொழுது அவனைப் பாருங்கள் !

" மில்பர்னுக்கு அமுல்ஸ்ப்ரே உடனேயே ஒத்துக் கொண்டது. அவனது பிறப்பு எடை மூன்று மாதங்களில் இரட்டிப்பாகி, மேலும் நன்கு வளர்ந்து வருகிறான் "

என்கிறார் 13-மாதக் குழந்தை மில்பர்னின் தந்தை திரு, மெல்வின் டி'ஸௌஸா பெருமிதத்துடன்

தாய்ப் பாலுக்குப் பதிலாகவோ அல்லது உபரி உணவாகவோ ஆயிரக் கணக்கான தாய்மார்கள் முதல் வாரத்திலிருந்தே அமுல்ஸ்ப்ரே உபயோகித்து வருகிறார்கள்

அமுல்ஸ்ப்ரே சீரணிக்க எளிதான, சரி-விகிதக் குழந்தை உணவு. நல்ல உடல் வளர்ச்சிக்குத் தேவையான புரதத்தை அதிக அளவில் கொண்டது அது. தவிர, அதில் வைட்டமின்கள், கார்போஹைட்ரேட்ஸ், தாதுப் பொருள்கள் ஆகியவையும் உண்டு. சுருங்கச் சொல்லில், உங்கள் குழந்தை விரைவாகவும் ஆரோக்கியமாகவும் வளரத் தேவையான யாவுமே.

ஸ்ப்ரே—ட்ரையிங் செய்முறையில் தயாரிக்கப்படுகிறது அமுல்ஸ்ப்ரே (உன்னதமான இச் செய்முறையில் தான் குழந்தை உணவுகள் யாவும் அமெரிக்காவில் இப்போது ஆக்கம் பெறுகின்றன). பாலிலுள்ள புரதத்தின் தரத்தை இச் செய்முறை நன்கு பாதுகாக்கிறது.

தயாரிக்கப்பட்ட இரண்டு ஆண்டுகளுக்குள்ளாகவே அமுல்ஸ்ப்ரே இந்தியாவிலேயே உச்ச-விற்பனையுடைய குழந்தை உணவாகத் திகழ்வதில் வியப்பென்ன!




# அமுல்ஸ்ப்ரே

தாய்ப் பாலுக்குப்
பதிலாகப் புகட்டச் சிறந்தது!

ASP/AS-8

## அத்தியாயம் 15

# காணாமல் போனவள்?

**கா**ல்ஃப் ஆட்டத்தில் முதல் பரிசு பெற்ற தேவ்சந்தைச் சுற்றி நாலு பேர்கூட இல்லை; இரண்டாவது பரிசு பெற்ற சாருலதாவைச் சூழ்ந்து நாற்பது பேர் நின்றார்கள்! சாருலதா பெண், அழகி என்பதுடன் தயக்கமோ கூச்சமோ இன்றித் தன்னைப் பாராட்ட வருபவர்களுடன் தாராளமாய்க் கைகுலுக்குவாள் என்பதையும் புரிந்து கொண்டிருந்ததால்தான் அப்படி அவளை மொய்த்தனர் என்பது வேணுவுக்குத் தெரிந்திருந்தது. அந்தக் கூட்டத்துக்கு வெளியே நின்று வேடிக்கை பார்த்துக் கொண்டிருந்தான் அவன்.

''கங்கிராஜுலேஷன்ஸ் மிஸ் சாருலதா!''

''அப்படிச் சொல்லாதீர்கள், குமார்! சாரு என்று கூப்பிடுங்கள்! 'ஸ்ரீமான் சம்பத்குமார் அவர்களே வணக்கம்!' என்று சொன்னால் அழகாக இருக்குமா? 'வணக்கம் குமார்' என்றால் தானே இயல்பாக ஒலிக்கிறது?''

சூழ இருந்தவர்கள் கலகலவென்று சிரித்தார்கள். ''வெல்ஸெட் சாரு!''

இதுதான் சாக்கு என்று சம்பத்குமார் இரண்டாவது தடவையாக அவள் கரத்தைப் பற்றிக் கொண்டான். ''கங்கிராட்ஸ் சாரு!''

தன் கரத்தை அவர்கள் குலுக்கும் போதே அவர்களுடைய குண இயல்புகளையும் புரிந்துகொள்ள முடிவதைச் சாருலதா உணர்ந்தாள். சிலர் அவளைத் தீண்டக் கிடைத்த சந்தர்ப்பத்தை அளவுக்கு அதிகமாகப் பயன்படுத்திக் கொண்டு இரண்டு கரங்களாலும் அவள் கையைப் பற்றி, அவள் தானாகவே அதை விடுவித்துக் கொள்ளட்டும் என்று காத்திருந்தார்கள். வேறு சிலர் கூச்சத்துடன் நாலு விரல்களை நீட்டினார்கள். அவள்தான் அவர்கள் கரத்தைப் பற்ற வேண்டியிருந்தது. இன்னும் சிலரது பிடியில் ஆத்மார்த்தமான நல்லெண்ணம் பாய்வதைத் தெளிவாக அறிய முடிந்தது. மற்றும் பலர் தொழில் வர்த்தகத் துறையில் அவளது முன்னேற்றத்தால் பாதிக்கப்பட்டவர்களாகப் பொறாமையுற்றிருந்ததும் புரிந்தது.

கூட்டத்தினிடையே வழி ஏற்படுத்திக் கொண்டு சாரங்கனும், வேணுகோபாலும் அருகருகே நின்ற இடத்துக்கு வந்தாள் சாருலதா. ''ஹல்லோ வேணு! ஆர் யூ நாட் கோயிங் டு கங்கிராஜுலேட் மீ?''

''நீ ஜெயிப்பதில் என்ன அதிசயம் சாரு? எந்தத் துறையில் நுழைந்தாலும் வெற்றி பெறுவது என்பது தான் உனக்கு அன்றாடக் காரியமாகி விட்டதே? நீ என்றைக்காவது எதிலாவது தோற்றால் அப்போதுதான் உன்னைக் கங்கிராஜுலேட் செய்வதாக இருக்கிறேன்!''

''நான் எதில் தோற்றாலும் நீங்கள் எதிர்பார்க்கிற ஒரு விஷயத்தில் நான் தோற்கப் போவதேயில்லை, வேணு!'' என்றாள் சாருலதா, அதரங்களில் புன்னகை நெளிய. ஆனால் அவளுடைய கண்களோ விஷமத்தனமாகக் கலகல



சாருலதா

கி. ராஜேந்திரன்

வென்று சிரித்தன! ''என்ன சாரங்கன், நீங்கள் எப்போ வந்தீர்கள்?'' என்று கேட்டாள்.

ஏதோ யோசனையாக இருந்தவன் திடுக்கிட்டு, ''என்னையா கேட்டீர்கள்?'' என்றான். ''மூன்றரை மணி சுமாருக்கு வந்தேன். ரொம்ப லாகவமாக ஆடினீர்கள். ஊட்டியில் இருந்தபோது கால்ஃப் லிங்க்ஸுக்கு அடிக்கடி போகும் வழக்கமுண்டு எனக்கு. அதனால் உங்கள் திறமையை என்னால் நன்றாக ரசிக்க முடிந்தது. பிரிலியண்ட் ஸ்ட்ரோக்ஸ்!''

''நீங்கள் இங்கேயும் கிளப் மெம்பராக வேண்டும் சாரங்கன். நான் ரெகமண்ட் பண்ணுகிறேன். வேணு

இரண்டாவது கையெழுத்து போடுவார். ஓ.கே.?''

''பேஷாக, வித் ப்ளெஷர்'' என்றான் வேணு.

''அது சரி, உங்களிடம் எனக்குத் தனிமையில் ஒரு முக்கிய விஷயம் பேச வேண்டுமே?'' என்றான் சாரங்கன்.

''நாளைக் காலை வரை காத்திருக்கக் கூடாத காரியமா? இப்போ பரிசளிப்பு விழா நடக்கப் போகிறது; அப்புறம் டின்னர். இரவு நான் சீக்கிரம் படுக்கப் போகும் பழக்கமுள்ளவள் என்பது உங்களுக்குத் தெரியும்.''

''சரி, சாரு! ஐந்து நிமிஷம் கிடைக்குமானால் பாருங்கள். இல்லையென்றால் காலையில் பேசுவோம்.''

''வேணு வாருங்கள்! பரிசளிப்பு விழாவின் போது நீங்கள் முதல் வரிசையில் உட்கார்ந்திருக்க வேண்டும்'' என்றாள் சாருலதா.

''ஐயய்யோ! என்னால் முடியாது'' என்று அவன் மறுத்த மறுகணம் அவள் முகம் வாடிப் போய் விட்டது.



''ஏன்? நான் பரிசு வாங்குவதைப் பார்க்கக் கசப்பாக இருக்கிறதா, உங்களுக்கு?''

''அதற்கு முன்னால் சொற்பொழிவுகளைக் கேட்டாக வேண்டுமே? எங்கேயாவது ஓரமாக உட்கார்ந்தால் போர் அடிக்கும் போது எழுந்து வெளியே போய் விடலாம்; அல்லது பக்கத்தில் இருப்பவருடன் அரட்டை அடிக்கலாம். முதல் வரிசையில் இருந்தால் ஆணி அடித்தாற் போல் ஆடாமல் அசையாமல், பேசாமல் உட்கார்ந்திருக்க வேண்டும், பெரிய மனுஷன் தோரணையில்!''

''தோரணை என்ன? பெரிய மனிதரே தான் நீங்கள்! முதல் வரிசையில் அமர்ந்திருக்கிற பெரிய மனிதர்களிடம் தலா ஆயிரம் ரூபாய் கால்ஃப் கிளப்புக்காக நன்கொடை வசூலிக்கப் போகிறார்கள், இன்றைக்கு. நீங்கள் ஒளிந்து கொண்டால் எப்படி?''

''அது சரி! அப்படியானால் முதல் வரிசையில் உட்கார்ந்துவிட வேண்டியதுதான். ஆயிரம் ரூபாய் என்னிடம் இல்லை என்பதைக் காட்டி, நான் பெரிய மனுஷன் இல்லை என்பதை நிரூபித்துவிட நல்ல சந்தர்ப்பம்!''

மூவரும் மேடையை நோக்கி நகர்ந்தார்கள்.

* * *

ஞாயிற்றுக்கிழமை முழுவதையும் கால்ஃப் மைதானத்தில் சுற்றி அலைந்து விளையாடிக் கழித்ததால் சாருலதா மிகவும் களைத்துப் போயிருந்தாள். இல்லாவிட்டால்கூட அவள் வழக்கமாகவே சீக்கிரமாகப் படுத்துக் கனவுகள் ஏதுமற்ற நித்திரையில் ஆழ்ந்துபோகிறவள்தான். எட்டு மணி நேரத்துக்குக் குறையாமல் தூங்கி விடுவாள். தேவையான அளவு ஓய்வு பெற்றால்தான் உடலும் அறிவும் இளமைச் சுறுசுறுப்புடன் பாக்கி நேரத்தில் இயங்கும் என்பதை அறிந்தவள் அவள்.

மறுநாள் காலை அவள் டென்னிஸ் ஆடக் கிளம்பியபோது எதிரே கேட்டைத் திறந்து கொண்டு சாரங்கன் வந்தான்.

''என்ன சாரங்கன், என்ன விசேஷம்?'' என்று கண்டிப்புக் குரலில்



கேட்டு, அவன் வீடு தேடி வந்தது தனக்குப் பிடிக்கவில்லை என்பதைத் தயக்கமின்றிக் காட்டிக் கொண்டாள் சாருலதா.

''ஒரு முக்கியமான சமாசாரம். நேற்றே சொல்ல நினைத்தேன். ஆனால் நீங்கள் நாளை பார்த்துக் கொள்ளலாம் என்று கூறி விட்டீர்கள்.''

'' எதுவானாலும் ஆபீஸில் பேசலாமே? பிஸினஸ் விவகாரங்களை வீட்டிலே உட்கார்ந்து விவாதிப்பது எனக்குப் பிடிக்காது.''

''இது ஆபீஸ் விஷயமல்ல; பர்ஸனல் மேட்டர்.''

''பர்ஸனல் மேட்டர் என்றால்....? உங்களைப் பற்றியதா, அல்லது என்னைப் பற்றியதா ?''

''உங்களைப் பற்றிய காரியம்தான். ஆனால் உங்களிடம் ரொம்பவும் மதிப்பு வைத்திருக்கிறேன் என்ற முறையில் நம்மைப் பற்றிய விஷயம் என்று கூடச் சொல்லலாம்.''

வராந்தாவில் போடப்பட்டிருந்த கூடை நாற்காலிகளுள் ஒன்றில் அவனை அமரச் செய்து சாருலதா தானும் உட்கார்ந்தாள். ''சொல்லுங்கள்!''

''நேற்று கால்ஃப் கோர்ஸில் நீங்கள் ஆடிக் கொண்டிருந்தபோது உங்களுடைய ஒவ்வொரு ஸ்ட்ரோக்கையும் கவனிக்க ஒரு கூட்டம் உங்கள் பின்னாலேயே வந்து கொண்டிருந்தது. இல்லையா ?''

''ஆமாம்.''

''அந்தக் கூட்டத்தில் நானும் ஒருவனாய் இருந்தேன்.''

''சரி.''

''அப்போது ஒரு சமயம் எனக்குப் பக்கத்தில் இருந்த இருவர் பேசிக் கொண்டது என் காதில் விழுந்தது.''

# 'ஆஸ்ப்ரோ'

# மட்டுமே மைக்ரோஃபைன்ட் செய்யப்படுகிறது அதிவேகமாக வலியை வெளியே இழுப்பதற்காக










சாப்பிடும் அளவு:
வயது வந்தவர்கள்: இரண்டு மாத்திரைகள் தேவையானால் மீண்டும் சாப்பிடவும்.
குழந்தைகள்: ஒரு மாத்திரை அல்லது உங்கள் டாக்டர் சொற்படி

கீழ்க் கண்டவைகளுக்கு புதிய மைக்ரோஃபைன்ட் 'ஆஸ்ப்ரோ' சாப்பிடுங்கள்:
நோவு • தலைவலி • உடல்வலி • ஃப்ளு • ஜுர வேகத்துடன் கூடிய ஜலதோஷம் • மூட்டுவலி • தொண்டை அழற்சி • பல்வலி.

புதிய மைக்ரோஃபைன்ட் 'ஆஸ்ப்ரோ' இப்பொழுது கிடைக்கும் அதி நவீனமான வலி நிவாரணியாகும்.



**புதிய மைக்ரோஃபைன்ட் 'ஆஸ்ப்ரோ' அதிவேகமாக வலியை வெளியே இழுத்துவிடுகிறது.**

நிகோலஸ் தயாரிப்பு

# மாடி ரயில்

மாடி பஸ் உங்களுக்குத் தெரியும்.

மாடி ரயில் பார்த்ததுண்டா? இல்லையா?

(53ம் பக்கத்தில் அதைக் காணலாம்)

" என்ன சொன்னார்கள்?" அலட்சியப் புன்னகையுடன் அவள் கேட்டாள்.

" 'அவள்தானா? நிச்சயம்தானா?' என்று ஒருவன் கேட்டான். 'எனக்குச் சந்தேகமாயிருக்கிறதே' என்றான்."

"உம்...?" சாருலதாவின் முகத்தில் புன்னகை மாறியதைக் கவனித்தான் சாரங்கன். அலட்சியத் தோற்றம் மறைந்து, அவள் வதனம் பாவம் என்றால் என்ன என்பதையே அறியாத ஒரு சிற்பி வடித்த சிலையாயிற்று. மிகச் சிரமப்பட்டு அந்த நிலை மாறாமல் கவனித்துக் கொண்டாள் சாருலதா.

சாரங்கன் தொடர்ந்தான்: "அந்த இன்னொருவன், 'எனக்குத் துளிக்கூடச் சந்தேகமில்லை; வேணுமானால் மற்றொரு முறை ஃபோட்டோவைப் பார்' என்றான்."

"அப்புறம்?"

"முதலில் பேசியவன் தன் சட்டைப் பையிலிருந்து ஒரு கவரை எடுத்து அதிலிருந்து ஒரு ஃபோட்டோவைப் பாதி தூரம் வெளியே இழுத்துப் பார்த்தான்."

"நீங்கள் பார்த்தீர்களா படத்தை?"

"ஒரே ஒரு கணம் பார்க்கும் வாய்ப்புக் கிட்டியது, சாரு!"

"என்ன தெரிந்தது?"

"ஒரு பெண்ணின் உருவம்."

"எப்படி இருந்தாள் அவள்?"

" கர்நாடக பாணியில் புடவை உடுத்தித் தலைவாரிப் பின்னிக் கொண்டிருந்தாள். மூக்குத்தி, தோடு எல்லாம் அணிந்திருந்தாள்."

"பிறகு?"

"உங்களையும் படத்தையும் அவர்கள் மாறி மாறிப் பார்த்தார்கள்."

"உம்...?"

" படத்தைக் கவருக்குள் தள்ளிப் பையில் செருகிக் கொண்டு அவர்கள் கிளம்பிவிட்டார்கள். கால்ஃப் ஆட்டத்தில் அவர்களுக்கு அக்கறையில்லை. உங்கள் திறமையைக் காண அவர்கள் வரவில்லை. உங்களைப் பார்க்கத்தான் வந்திருந்தார்கள்!"

"நீங்கள் படத்தைப் பார்த்தீர்கள் அல்லவா?"

"அவர்கள் தோளுக்கு மேலாக எம்பிப் பார்க்க வேண்டியிருந்தது. படத்தைப் பாதி அளவுதான் கவரை விட்டு வெளியே இழுத்திருந்தார்கள். மறு பாதியில் யார் உருவம் இருக்கிறதோ, தெரியாது."

"படத்தில் இருந்த பெண்ணுடன் என்னை ஒப்பிட்டுப் பார்த்தார்கள் என்கிறீர்களே, உங்களுக்கு என்ன தோன்றியது? படத்தில் இருந்த பெண் நான்தானா?"

"எனக்கு என்ன நினைப்பதென்று புரியவில்லை. விநாடிப் போதில் என்ன முடிவுக்கு வர முடியும்? படத்தைக் கையில் கொடுத்தால் நன்றிப் பார்த்துத் தீர்மானமாகச் சொல்லலாம். அலங்காரத்தைப் பொறுத்த வரையில் உங்களுக்கும் படத்தில் இருந்த பெண்ணுக்கும் சம்பந்தமேயில்லை. ஒருவேளை ரொம்ப நாளைக்கு முன்னால் எடுக்கப்பட்ட படமாக இருக்கலாம். அதோடு அவர்கள் நடத்தை என் மனத்தைக் குழப்பி விட்டது."

"யதேச்சையாக நடந்த ஒரு சம்பவத்தை நீங்கள் இந்த அளவுக்கு விவரிப்பதே பெரிய காரியம். அந்த இருவரும் எப்படி இருந்தார்கள்?"

"ஒருவன் தாட்டியாகவும் சற்றுக் குள்ளமாகவும் இருந்தான். இன்னொருவன் நோஞ்சானாகத் தோன்றினான். இப்போது நினைத்துப் பார்த்தால் எனக்கு வாரல் . அன்டு ஹார்டி சினிமா ஞாபகத்துக்கு வருகிறது. ஆனால் அப்போது அப்படித் தோன்றவில்லை. அழுத்தமான பேர்வழிகள் என்று பட்டது. அப்போது ஏற்பட்ட அதிர்ச்சியிலிருந்து நான் இன்னும் மீளவில்லை."

"இதில் அதிர்ச்சி அடைய என்ன இருக்கிறது?"

"நீங்கள் இப்படிக் கேட்பது எனக்கு மேலும் அதிர்ச்சி அளிக்கிறதே!"

சாரு சிரித்தாள். "யாரோ இருவர் தங்கள் குடும்பத்தில் காணாமல் போன ஒருத்தியைத் தேடிக் கொண்டிருக்கிறார்கள். அப்படிக் காணாமல் போனவள் நானாக இருக்கலாமோ என்று சந்தேகிக்கிறார்கள், இவ்வளவுதானே?"

"அவ்வளவுதான்."

"வந்து கேட்டால், அவர்கள் வீட்டில் காணாமல் போன பெண் நான் இல்லை என்று சொல்லி அனுப்பி விட வேண்டியது."

"சரி...."

''என்ன இழுத்தாற்போல் பேசுகிறீர்கள்? உங்களுக்கு நம்பிக்கை ஏற்படவில்லையா? என்னைப் பார்த்தால் காணுமல் போன பெண் போலவா தோன்றுகிறது உங்களுக்கு?''

''உரக்கப் பேசாதீர்கள்! உங்கள் அப்பா காதில் விழுந்தால் உதைக்கப் போகிறார்!''

''உதைக்கிற அளவு அவருக்குத் தெம்பு கிடையாது. அதிகபட்சம் கையில் இருக்கும் விஷ்ணு சகஸ்ரநாமம் புத்தகத்தை உங்கள்மீது விட்டெறிவார், நல்ல காலிகோ பைண்டு!''

''ஆகா, ஆதி சங்கரரின் பாஷ்யத்துடன் கூடியதுதானே? கொடுத்து வைத்திருக்க வேண்டுமே!'' சாரங்கனின் இயல்பான கலகலப்பு சுபாவம் இப்படிப் பேசினாலும் அது அதிக நேரம் நீடிக்கவில்லை. ''ஆனாலும் எனக்குக் கவலையாகத்தான் இருக்கிறது, சாரு! உன் தம்பியை வேறு நாலு நாட்களாய்த் தேடிக் கொண்டிருக்கிறோமா; அவனுக்கும் இவர்களுக்கும் ஏதாவது சம்பந்தம் இருக்குமோ என்று....''

''சிச்சீ! என்ன சொல்கிறீர்கள். அப்படிப்பட்ட எண்ணங்களை உடனே துடைத்து எறியுங்கள். குணு கோபித்துக் கொண்டு போகலாம். ஆனால் எனக்குத் தீங்கு ஏதும் நினைக்கமாட்டான். மயில் இறகினால்கூட என்னை அடிக்க அவனுக்கு மனசு வராது!''

''ஏதோ தோன்றியது. சொன்னேன். தப்பாக நினைக்காதீர்கள்!''

''மேலும் சாரங்கன், குணு நேற்று ராத்திரி ஃபோன் செய்து என்னை கங்கிராஜுலேட் பண்ணினான், கால்ஃபில் பரிசு பெற்றதற்காக. அவனை ஃபோனை வைக்க விடாமல் பேசினேன். ஐந்து நிமிஷம்கூட ஆகியிராது, அவன் எங்கே ரூம் எடுத்துத் தங்கியிருக்கிறான் என்பதைச் சொல்ல வைத்து விட்டேன்!''

''பாசத்துக்கு அவ்வளவு சக்தி இருக்கிறது, பாருங்கள்!''

''இன்னும் ஒரு வாரம், பத்து நாளைக்குள் அவனை மறுபடியும் இந்த வீட்டுக்கே வரவழைத்துவிட முடியும் என்ற நம்பிக்கையும் எனக்கிருக்கிறது.''

''சரி, அப்படியானால் குணுவை இனி நான் தேட வேண்டாம்; ஒரு வேலை மிச்சம்.''

சாருலதா எழுந்தாள். ''நேரமாகிறது; வேணுகோபால் டென்னிஸ் கோர்ட்டில் காத்திருப்பார்.''

காரில் ஏறப் போன சாருலதா டென்னிஸ் மட்டையைப் பின் ஸீட்டில் போட்டு விட்டுத் தயங்கித் திரும்பினாள். ''ஆமாம், அந்த இருவரும தமிழில்தான் பேசினார்களா?'' என்று சகஜமாகக் கேட்பதுபோல் கேட்டாள்.

சாரங்கன் திடுக்கிட்டு விழித்துக் கொண்டவன் போல் நிமிர்ந்தான். ''ஏன் அப்படிக் கேட்கிறீர்கள்? அவர்கள் தமிழில் பேசி இருக்க மாட்டார்கள் என்று எதனால் சந்தேகிக்கிறீர்கள்?''

''இதென்ன இப்படி மிரள்கிறீர்கள்?''

''மிரள்வதற்குக் காரணம் இருப்பதால்தான். அவர்கள் தமிழில் பேசவில்லை, சாரு!''

''பிறகு?''

''ஹிந்தியில் பேசினார்கள்!''

''உங்களுக்கு ஹிந்தி தெரியுமா?''

''பிராதமிக் வரை படித்தேன். ஆனால் பரீட்சை எழுதவில்லை.''

''நீங்கள் ஏதாவது அரைகுறையாகப் புரிந்துகொண்டு மொட்டைத் தலைக்கும் முழங்காலுக்கும் முடிச்சுப் போடுகிறீர்களோ என்னவோ?''

''அவர்கள் பேசியதே சொற்பம். அதைப் புரிந்துகொள்வது ஒன்றும் சிரமமாக இல்லை. மேலும் அவர்கள் பேச்சை விட நடத்தையே அதிகமான விஷயங்களை எனக்குப் புரிய வைத்தது.''

''சாரங்கன்! டோண்ட் வொர்ரி! இந்த நிகழ்ச்சியை அடியோடு மறந்து விடுங்கள். தாங்கள் தவறு செய்து விட்டதை உணர்ந்து அவர்கள் நமக்குத் தொந்தரவு கொடுக்காமலிருந்து விடலாம். அப்படியே அவர்கள் என்னைத் தேடி ஆபீசுக்கு வந்தாலும் நீங்களே பார்த்து நல்ல வார்த்தையாகச் சொல்லி அனுப்பி விட்டால் தீர்ந்தது.''

''ஆபீசுக்கு வராமல் இங்கே வீட்டுக்கு அவர்கள் வந்து சேர்ந்தால்?''

''கூர்க்கா எதற்கு இருக்கிறான்?'' என்று கேட்டுச் சிரித்தபடியே சாருலதா காரைக் கிளப்பினாள்.

அது கண்ணுக்கு மறையும் வரை பார்த்துக் கொண்டிருந்த சாரங்கனுக்குச் சாரு அந்த நிகழ்ச்சியை அலட்சியப்படுத்தி ஒதுக்குவதாகத் தோன்றவில்லை; அலட்சியப்படுத்தி ஒதுக்குவது போல் நடிப்பதாகப்பட்டது.

* * *

**பா**ரத் இன்ஷூரன்ஸ் கம்பெனியின் போர்ட் ஆஃப் டைரக்டர்ஸ் மீட்டிங்கை முடித்துக் கொண்டு பதினொன்றரை மணி' சுமாருக்குக் காரியாலயத்துக்கு வந்து சேர்ந்தாள் சாருலதா.

''ஃபினோயிங் இளப் செக்ரட்டரி ஃபோன் செய்தார்; உங்களைப் பார்க்க

# சென்னை மாநில கூட்டுறவு வங்கி லிமிடெட்

**271, அங்கப்ப நாயக் தெரு, சென்னை-1**

தந்தி விலாசம்: ''அர்பாங்க்'' — தொலை பேசி எண்:
தபால் பெட்டி எண்: 226 — 22766, 22767, 24589

எங்கள் வங்கியில் நீங்கள் போடும் டெபாசிட்டுகள் நாட்டின் பொருளாதார முன்னேற்றத்திற்கு அடிப்படையான விவசாயத் திற்கும் விவசாயத் தொழில்களுக்கும் உதவி செய்யும்.

**சீசன் டிபாசிட்:** ரூ. 1,000ம் அதற்கு மேலும் (வருடத்திற்கு)

| | |
|---|---|
| 15 நாட்கள் முதல் 45 நாட்கள் வரை | 1.25% |
| 46 நாட்கள் முதல் 90 நாட்கள் வரை | 2.50% |

**பிக்சட் டிபாசிட்:** ரூ. 1,00ம் அதற்கு மேலும்

| | | | |
|---|---|---|---|
| 91 நாட்களும் | அதற்கு மேலும் | 6 மாதங்களுக்குள்ளாக | 4.50% |
| 6 மாதங்களும் | ,, | 12 ,, | 5.00% |
| 12 மாதங்களும் | ,, | 2 வருடங்களுக்குள்ளாக | 5.75% |
| 2 வருடங்களும் | ,, | 3 ,, | 6.00% |
| 3 வருடங்களும் | ,, | 5 ,, | 6.25% |
| 5 வருடங்களும் | அதற்கு மேலும் | | 6.75% |

**கரெண்ட் அகௌண்ட்:** (ரூ. 25000 வரை தினசரி நிலுவையின்பேரில் வட்டி கணக்கிடப்படுகிறது.) 0.50%

**சேவிங்ஸ் பாங்க் அகௌண்ட்:** (5 தேதி முதல் மாதம் முடிய குறைந்த பட்ச நிலுவையின்பேரில் வட்டி கணக்கிடப்படுகிறது.) 3.50%

**ரெக்கரிங் டிபாசிட்:** தவணைகளுக்குப் பெறும் மொத்தப் பணம்:

| மாதத் தவணை | 12 | 24 | 36 | 48 | 60 | 72 | 84 |
|---|---|---|---|---|---|---|---|
| ரூ. 5ம் அதன் மடங்குகளும் | 62 | 128 | 198.50 | 273 | 355 | 442 | 535 |

**இதர விபரங்களை வங்கியின் கீழ்க்கண்ட அலுவலகங்களிலிருந்தும் பெறலாம்**

| கிளை அலுவலகம் பெயர் | முகவரி | தொலை பேசி எண் |
|---|---|---|
| மயிலாப்பூர்: | 32-A, லஸ் சர்ச் ரோடு, சென்னை-4 | 71262 |
| எழும்பூர்: | 68, எழும்பூர் ஹைரோடு, சென்னை-8 | 86510 |
| திருவல்லிக்கேணி: | 111, பெரிய தெரு, சென்னை-5 | 84692 |
| தியாகராயநகர்: | 19, பாண்டி பசார், சென்னை-17 | 442852 |
| காந்தி நகர்: | 78, இரண்டாவது மெயின் ரோடு, சென்னை-20 | 71132 |
| ஷெனாய் நகர்: | 8/1, செங்குந்த முதலித் தெரு, சென்னை-30 | 64834 |
| கெல்லீஸ்: | 2, மாதவாக்கம் டாங்க் ரோடு, சென்னை-10 | 64105 |
| மயிலாப்பூர் டாங்க்: | 10, தெற்கு மாட வீதி, சென்னை-4 | 73158 |
| சாந்தோம்: | 79, சாந்தோம் ஹைரோடு, சென்னை-28 | 74300 |
| கிரீன்வேஸ் ரோடு: | 14, கேசவபெருமாள்புரம், சென்னை-28 | 74245 |
| மவுண்ட் ரோடு: | 109, டி.-சு. மவுண்ட் ரோடு, சென்னை-18 (காமதேனு கூட்டுறவு சிறப்பு அங்காடி) | 440292 |
| சாஸ்திரி நகர்: | பி. 10, சாஸ்திரி நகர், சென்னை-20 | 76418 |

**ஆர். கனகசபை,** எம்.எல்.ஏ.
தலைவர்

**டி. வர்த்தமானன்**
காரியதரிசி

CTC* டஸ்ட் டீ தரமான தேநீரின் சுவையையும்
அழுத்தமான தேநீர் சத்தையும் அளிக்கிறது

# சூப்பர் டஸ்ட் கிடைப்பவற்றுள் மிகச்சிறந்த CTC டஸ்ட் டீ




BB 538k

வேண்டுமாம்'' என்றான் சாரங்கன், அன்றையத் தபால்களுடன் வந்தபடியே.

''என்ன விசேஷம்?''

''புதிதாக ஒரு டிரெயினிங் விமானம் வாங்கியிருக்கிறார்களாம். அதை வெள்ளோட்டம் விடுவது நீங்களாகத்தான் இருக்க வேண்டும் என்றார். உங்களுக்குப் பைலட் லைசென்ஸ் உண்டு என்பதே எனக்கு இப்போதுதான் தெரியும்!''

''விமானம் செலுத்தப் பழகிய போது நான் ஒரு ஹாபி என்ற அளவில்தான் பயிற்சி பெற்றேன். ஆனால் ஒவ்வொரு சமயம் அதுவே பெரிய உதவியாக இருக்கலாம். பம்பாய், தில்லி என்று அடிக்கடி போக நேர்கிறதே. எப்பவாவது ஸீட் இல்லை என்று சொல்லி விட்டால் அவசரத்துக்கு ஒரு டக்கோட்டாவை சார்ட்டர் பண்ணிப் பறந்துவிடலாம் இல்லையா?''

''உங்களுக்கு ஸீட் இல்லை என்று ஐ. ஏ. ஸி. யில் எவன் சொல்லுவான்? கெரவெல்லில் பறந்த பிறகு டக்கோட்டாவைக் கையாள்வது என்றால் கட்டை வண்டியை ஓட்டுவது போலல்லவா இருக்கும்?''

''அது சரி, இப்போ என்னை ரேக்ளா வண்டியைத்தானே வெள்ளோட்டம் விடச் சொல்லி அழைக்கிறார்கள்? புஷ்பக்கா, டைகர் மாத்தா?''

''புஷ்பக்தான்— ஹால் தயாரிப்பு.''

''எவ்வளவு டொனேஷன் எதிர்பார்க்கிறார்கள்?''

''அதை எப்படி ஊகித்தீர்கள்?''

''என்னைப் போல் பணம் படைத்தவர்களைத் தலைமை தாங்கு, வெள்ளோட்டம் விடு, திறந்து வை என்றெல்லாம் சொல்லி அழைத்தால் அது பெரும்பாலும் நன்கொடையை எதிர்பார்த்துத்தான் இருக்கும். சாரங்கன், இன்றே இரண்டாயிரத்து ஐந்நூறுக்கு ஒரு செக் அனுப்பி விடுங்கள். பணம் கைக்கு வந்து சேர்ந்த பிறகும் வெள்ளோட்டத்துக்கு நானேதான் வரவேண்டும் என்று வற்புறுத்தினார்கள் என்றால் அப்புறம் பார்த்துக் கொள்ளலாம்.''

காரியாலய அலுவல்களில் அவள் கருத்தைப் பெற வேண்டிய அம்சங்கள் முடிந்ததும் சாரங்கன் எழுந்து தன் அறைக்குப் போக நடந்தான்.

கதவருகே போன அவனைக் கூப்பிட்டாள் அவள். அவன் திரும்பியபோது அவள் அவனுக்குத் தன் முதுகைக் காட்டி ஜன்னல் வழியே மவுண்ட் ரோடில் பார்வையைச் செலுத்திக் கொண்டிருந்தாள். ''அவர்கள் வந்தார்களா?'' என்று கேட்டாள்.









சாரங்கனின் முகத்தில் விசனத்தின் சாயல் படர்ந்தது. ''அவர்கள் என்றால்?''

''பத்து நாளைக்கு முன்னால் காலேஜ் க்கோர்னில் பார்த்ததாகச் சொன்னீர்களே, அவர்கள்தான் !''

''அன்று ரொம்ப அலட்சியமாகப் பேசினீர்களே, இன்று ஏன் விசாரிக்கிறீர்கள் ?''

''சும்மாத்தான்; மர்மக் கதை ஒன்றைப் பாதி படித்துவிட்டு நிறுத்தி விட முடிகிறதா ? முடிவைத் தெரிந்து கொள்ளும் ஆவல் !''

''வந்தார்கள்.'' — பரிவும் அனுதாபமும் மிகக் கூறினான் அவன்.

''வந்தார்களா !'' வந்தது அவளுக்குப் பிடிக்கவில்லை என்பதைத் தொனி உணர்த்தியது.

''ஆமாம்.''

''நீங்கள் என்ன சொன்னீர்கள்?''

''நீங்கள் என்ன சொல்லச் சொன்னீர்களோ, அதைத்தான் ! வேறு யாரையோ நினைத்துக் கொண்டு இங்கே வந்திருக்கிறீர்கள். நீங்கள் தேடும் பெண் சாருலதா இல்லை என்றேன்.....''

''திருப்தி அடைந்து திரும்பி விட்டார்களா ?''

''இல்லை ! 'நாங்கள் தவறு செய்யவில்லை. சரியான இடத்துக்குத்தான் வந்திருக்கிறோம்' என்றார்கள்.''

''என்னிடம் என்ன காரியம் ஆக வேண்டுமாம் அவர்களுக்கு?''

''அதை அவர்கள் சொல்லவில்லை ; உங்களை நேரில் தனிமையில் சந்தித்துப் பேச வேண்டும் என்றார்கள்.''

''ஒரு காரியமுமில்லாமல் சும்மா வருகிறவர்களிடம் அரட்டை அடித்துக் கொண்டிருக்க எனக்கு நேரமில்லை என்று சொல்லி யிருப்பீர்கள்!''

''சொன்னேன்.''

'' அதைக் கேட்டுக் கொண்டு அவர்கள் போய் விட்டார்கள்; முடிந்தது கதை !'' சாருலதா ஜன்னல் பக்கமிருந்து மேஜையின் அருகே வந்தாள் ஒரு தீர்மானத்தோடு.

''கதை முடியவில்லை, சாரு ! இப்போதுதான் ஆரம்பமாகி யிருக்கிறது ! அவர்கள் மறுபடியும் வருவோம் என்றார்கள். அவர்களைப் பார்க்க நீங்கள் சம்மதம் அளிக்கும் வரை திரும்பத் திரும்ப வருவார்களாம்.''

அவள் வலுவிழந்தவள் போல் மெல்ல நாற்காலியில் அமர்ந்தாள்.

''அடிக்கடி வந்து தொந்தரவு கொடுப்பது என்று அவர்கள் ஆரம்பித்தால் நீங்கள் போலீஸைக் கூப்பிட வேண்டியதுதான் !''

''நான் உங்கள் நிலையில் இருந்தால் போலீஸைக் கூப்பிடுமுன் ஒரு தடவைக்கு இரண்டு தடவையாக யோசித்துச் செய்வேன்.''

மேஜை மேல் எதையோ தேடுவது போல் பாவனை செய்து, குனிந்த தலை நிமிராமல் சாருலதா கேட்டாள் : ''எதனால் அப்படிச் சொல்கிறீர்கள்?''

''அவர்கள் கூறிய விஷயம் அப்படி என்னை வைக்கிறது.''

''ஓ ! அப்படியானால் அவர்கள் இன்னும் ஏதேதோ உங்களிடம் சொல்லி இருக்கிறார்கள்.''

''ஆமாம்.''

சாருலதா கோபத்துடன் எழுந்து, மேஜையைக் குத்தியபடி கத்தினாள்: ''சாரங்கன் ! கெஞ்ச வேண்டுமா, நான்? முழுவதையும் சொல்லித் தொலைக்கிறதுதானே ?''

''தயக்கத்துக்குக் காரணம் இருக்கிறது சாரு ! என் பெருமதிப்புக்கும் மரியாதைக்கும் உரிய உங்களுக்கு ஏதாவது தீங்கு நேரலாமோ என்று நினைத்துப் பார்க்கவே எனக்குக் கஷ்டமாக இருக்கிறது.''

'' பரவாயில்லை, சொல்லுங்கள், சாரங்கன் !'' அதட்டினாள் அவள். அவள் உடம்பெல்லாம் நடுங்கிக் கொண்டிருந்தது.

''அவர்கள்.... அவர்கள்...''

''உம்....'' காலால் தரையை உதைத்தாள் அவள், பொறுமை இழந்து.

''சாரு ! அமைதியாக இருங்கள் ; மனத்தைத் திடமாக வைத்துக் கொள்ளுங்கள். அந்த இருவரும், 'புனிதமான' கங்கை நதிக் கரையில் பாவம் புரிய யாராவது நினைப்பார்களா ?' என்று உங்களைக் கேட்கச் சொன்னார்கள். இந்தக் கேள்வியை உங்கள் காதில் போட்டுவிட்டால் அப்புறம் அவர்களைச் சந்திக்க நீங்கள் உடனே சம்மதிப்பீர்களாம் !''

சாருலதா மேஜையில் கைகளை மடித்து வைத்து முகத்தை அவற்றில் பதித்து விம்மி விம்மி அழத் தொடங்கி விட்டாள்.

பிரமித்துப் போய்ச் சற்று நேரம் நின்ற சாரங்கன் பிறகு, அவளைச் சமாதானப்படுத்துவதுகூட அவளுக்குப் பிடிக்காது என்பதைத் தெரிந்து கொண்டிருந்தானாதலால் ஓசைப்படுத்தாமல் அறையை விட்டு வெளியேறினான்.

(தொடரும்)



ஒரு சிட்டிகை
ஆரதி ப்ளுவை
துவைப்பதற்கான
துணிமணிகள் நிறைந்த
பக்கெட்டில்
போட்டால்
உங்களுக்கு
ஏராளமான
மதிப்பைத் தரும்



துணிமணிகள்
நீடித்துழைக்க
பிரகாசமாகவும்
வெண்மையாகவும்
இருக்க
ஆரதி ப்ளு










ஸேத் கெமிகல்
ஒர்க்ஸ்

SCW/G/42 TAM

சென்னை ஏஜன்ட் :

M/s. டி டி என். & கம்பெனி

5 லஸ் சர்ச் ரோடு, மயிலாப்பூர், சென்னை - 4

# [illegible]ட்டு பொங்கல்

எம். எஸ். கல்யாணசுந்தரம்

முன் நாட்களில் கோடைக்கானலுக்கு அடிக்கடி செல்பவர்களுக்கு ஸச்சிதானந்த அய்யரையும் அவர் மனைவி பார்வதியையும் பற்றி நன்கு தெரியும். அய்யர் உயர்தர அரசாங்கப் பதவியிலிருந்து பல ஆண்டுகளுக்குமுன் ஓய்வு பெற்றவர். உத்தியோகம் பெரும்பாலும் மலை ஊர்களில் இருந்ததால் அவர் பாக்கி நாட்களையும் கோடைக்கானலில் கழிக்கத் திட்டமிட்டார். ஆறு ஏழாயிரம் அடி உயரத்தில் உள்ள அவ்வூரின் குளிர்ச்சி பனிக் காலத்தில் வயோதிகர்களுக்கு ரொம்ப அதிகம்; அதிலும் ஆசாரம் பார்ப்பவர்களுக்கு அசௌகரியம். ஆகவே, அவர் ஐயாயிரம் அடி உயரத்தில் சாலையோரத்தில் ஓர் இடம் விலைக்கு வாங்கி அழகிய தோட்டமும் வசதியான வீடும் அமைத்துக்கொண்டார். அங்கிருந்து கோடைக்கானல் டவுன் எட்டு மைல் தூரமிருக்கும்.



கணவன் மனைவி இருவருக்கும் வானப்பிரஸ்த வாழ்க்கை மிகவும் பிடித்திருந்தது. சமவெளி நாட்டில் பெரியகுளத்திலும், மேலே கோடைக்கானலிலும் அவர்களுக்கு உறவினர்களும் நண்பர்களும் பலர். பலசரக்குச் சாமான்கள், தவிடு, பருத்திக் கொட்டை அல்லது கீழ்நாட்டுக் காய்கறிகளுக்காக ஒரு கடிதம் போட்டு விட்டால் பஸ் அல்லது லாரியில் மறு நாள் சாமான்கள் வந்து இறங்கி விடும். மற்றப்படி, பால், மலைநாட்டுக் காய்கறி, பழவகைகள், தேன் வகையறா தோட்டத்திலேயே கிடைத்தன. பார்வதி அம்மாள் ரொம்ப ஜாக்கிரதையாக இருந்ததால், கூடம், சாம்பிராணி... சுக்கு சித்தரத்தை.... உள்பட எல்லாச் சாமான்களும் எக்காலத்திலும் வீட்டில் இருக்கும்.

இப்படி இருக்கையில் சச்சிதானந்தர் திடீரென்று நோய்வாய்ப்பட்டார். நாலு திக்குகளிலும் தந்திகளும், டெலிபோன் செய்திகளும் பறந்தன. தொலைவில் உத்தியோகம் பார்க்கும் புத்திரர்கள் வந்து கூடினார்கள். அதற்கிடையே உள்ளூர் வைத்தியர் உடனடியான உதவி புரிந்துவிட்டு, வயது எண்பதுக்கு மேலாகி விட்டது. குளிர் குறைவாகவும் டாக்டர் சுலபமாய்க் கிடைக்கக் கூடியதாகவும் உள்ள ஊருக்குச் சென்றுவிடுவது உசிதமென்று யோசனை கூறினார்.

பிரயாணத்துக்கு ஏற்பாடுகள் ஆயின.

## பனிப் போர்!




நன்றி: வோர்ல்ட் ஃபெடரலிஸ்ட்.

கோடைக்கானலில் வேலை பார்க்கும் ஓர் உறவினர் அவ்வப்போது வந்து விட்டைக் கவனிப்பதாக வாக்களித்தார். அவர் பெயர் ராமமூர்த்தி.

தன் கரபியைப் பற்றித்தான் பெரியம்மாளுக்கு அதிகக் கவலை. அந்தக் கிழட்டுப் பசு நல் மனம் படைத்த பிராணி. பார்த்தால் பசு, பாய்ந்தால் புலி என்பது யதார்த்தமாக அதற்குப் பொருந்தும். ஒரு முறை மேய்ச்சலுக்குச் சென்ற மாடுகள் வீடு திரும்பும் போது வானம் இருண்டு மஞ்சு மூட்டம் (மூடுபனி) கவிந்தது. இருபது அடிகளுக்கு முன்னால் இருக்கும் மரங்கள் மறைந்தன. புலி விரும்பும் சூழ்நிலை அதுவே. ஏதோ ஒரு நொண்டிக் கன்றுக்குத் துணையாகக் கரபி கடைசியில் வந்து கொண்டிருந்தது. ஒரு புலி கன்றைத் தாக்கிற்று. கன்று கதறிற்று. அது போன்ற சந்தர்ப்பங்களில் பசுக்கள் சிதறி நாலா பக்கமும் ஓடும். கரபி அவ்வாறு செய்யவில்லை. கொம்புகளைத் தாழ்த்திப் புலி மேல் பாய்ந்தது. புலி அதன் மேல் தன் கோபத்தைக் காட்டி நகத்தால் அதன் முகத்தில் அறைந்து விட்டு வலது தோள் பட்டையில் பற்களைப் பதித்தது. கரபி சட்டென்று பின் வாங்கி, மறுபடியும் புலிமேல் பாய்ந்து கொம்பால் நன்றாய்க் குத்தி விட்டது. ஒரு கொம்பின் நுனி சற்று உள்நோக்கி வளைந்திருந்ததால் கொம்பை விடுவித்துக் கொள்ள முடியவில்லை. புலியும் அதை மேலும் நெருங்க முடியவில்லை. புலி தன் விடுதலைக்காகச் செய்த வலுவான முயற்சியில் இரண்டும் கீழே விழுந்து இங்குமங்கும் இழுபட்டன. கடைசியில் புலி விடுதலை பெற்று, உயிர் பிழைத்தது தம்பிரான் புண்ணியம் என்று அடர்ந்த புதர்களுக்குள் மறைந்து விட்டது. மரத்தில் தொத்திக் கொண்டிருந்த ஒரு சிறுவன் நடுக்கத்தோடும் ஆச்சரியத்தோடும் இதையெல்லாம் பார்த்துக் கொண்டிருந்தான். புலி மறைந்ததும் அவன் கூச்சல் போட்டான். அதற்குள் அலறிக் கொண்டு ஓடிய கன்றும் மந்தையை அடைந்து விட்டது. மாட்டுக்காரச் சிறுவர்கள் வேறு சிலரையும் அழைத்துக்கொண்டு, தங்கள் தகர ஊதல்களை முழங்கியவண்ணம் ஓடி வந்தார்கள். செடி புதர்கள் முறிந்து நசுங்கியிருந்தன. இரு பிராணிகளின் கால் தடங்களும் சில இடங்களில் தெளிவாய்த் தெரிந்தன. புலியின் தடம் பெரிய அப்பளம் அளவு இருந்தது.

ஆனால் கரபி தென்படவில்லை. கொஞ்ச தூரம் வரையில் அதன் தடம் மட்டுமே தெரிந்தது. விஷயம் அறிந்த பார்வதி அம்மாள் இரண்டு ஆட்களை அழைத்துக்கொண்டு, ஹரிகேன் விளக்கு, கயிறு, ஈட்டி முதலிய உபகரணங்களுடன் "கரபி!... கரபி! ...." என்று செல்லமாய் அழைத்து அதைத் தேடிப் புறப்பட்டு விட்டாள். சாலையிலிருந்து நூறடி கீழே காட்டிலிருந்து, "அம்மா!" என்ற பதில் கிடைத்தது. ஆட்கள் இறங்கி அதை இட்டு வந்தார்கள். வீடு வந்து சேரும்போது இரவு பத்து மணி யிருக்கும்.

சச்சிதானந்தர், "வந்து விட்டாயா! நல்ல காலம். உன்னால் போகாமல் இருந்திருக்க முடியாது. வெந்நீரில் வெல்லம் கரைத்து வைத்திருக்கிறேன். கரபிக்கு வை. உனக்கு ரவைக் கஞ்சி இருக்கிறது. மற்றது காலையில் பார்த்துக் கொள்ளலாம்" என்றார்.

மறு நாள் அக்கம் பக்கத்துப் பால்காரர்கள் கரபியைக் கண்டு அதிசயித்து, "நார்த்தங்காயை இரண்டாக நறுக்கி ஒரு மூடியைக் கொதிக்கும் எண்ணெயில் முக்கிக் கடிவாயில் வேது கொடுக்க வேண்டும்; ஏழெட்டு நாட்கள் அவ்வாறு செய்ய வேண்டும்; இல்லாவிட்டால் புழுப் பிடிக்கும்" என்ற கருத்துப்பட அவர்கள் பாணியில் யோசனை கூறினார்கள்.

சிகிச்சைக்கு ஏற்பாடாயிற்று. ஆனால் கரபி ஆட்களை அண்ட விடவில்லை. கூரை வரையில் குதித்து, சத்தம் போட்டு ஆர்ப்பாட்டம் செய்தது. கடைசியில் பார்வதிதான் அன்பு மொழிகளுடன் பசுவைச் சாந்தப்படுத்தி, அந்தப் பரிதாபகரமான சிகிச்சை செய்ய வேண்டி வந்தது. அப்பொழுது கரபி அரை மனத்துடன், "அம்பா!" என்று கத்தி உடலைச் சிலிர்ப்பது தவிர வேறு ஒன்றும் செய்யவில்லை. அது பேசுவதானால், "அம்மணி! தங்கள் அன்புக்காக எவ்வளவு வேதனைகளைப் பொறுத்துக் கொண்டிருக்கிறேன், தெரியுமா?" என்று சொல்லியிருக்கும்.

அந்த நிகழ்ச்சிக்குப் பிறகு கரபி ஒரு கன்று போட்டது. எட்டாவது. கிழத் தன்மையால் சிரமப்பட்டது. பார்வதியம்மாள் விளக்குடன் கொட்டத்தில் படுத்திருந்தாள். திங்கட்கிழமை தொடங்கிய வலி செவ்வாய், புதன், வியாழன் என்று நீடித்தது. அதுவரையில் அவசரப்பட்ட பார்வதியம்மாள், "கரபி, வெள்ளிக்கிழமை வேண்

# இந்தியாவின் ரேடியோக்கள் மற்றும் டிரான்ஸிஸ்டர்கள் தொழிலிலேயே அதிகமாக ஏற்றுமதிசெய்யும்

# மர்பி அளிக்கும்...




மினி மாஸ்டர் 4
2 பாண்ட் ஆல்-வேவ்
ரூ. 220.00*



நம்நாட்டிலும்,
வெளிநாட்டிலும்
டிரான்ஸிஸ்டர்களில்
அதிகமாக விரும்பி
வரவேற்கப்படுவது!



மினி பாய் 2
2 பாண்ட் ஆல்-வேவ்
ரூ. 175.00*

ம்யூஸிஷியன்
மீடியம் வேவ்
ரூ. 125.00*



ருபையாபீர்
3 பாண்ட் ஆல்-வேவ்
ரூ. 283.00*

சில டிரான்ஸிஸ்டர்களே நீங்கள் செலவழிக்கும் பணத்திற்கு சிறந்த பலனை அளிக்கிறது-கஷ்டத்தை குறைப்பது !

இதனாலேயே, இந்நாட்களில் மேலும் மேலும் அதிகமான ஜனங்கள் மர்பியையே விரும்பி வாங்குகிறார்கள். உண்மையாக 60,000 த்திற்கு மேற்பட்ட மர்பி-இந்தியா ரேடியோக்களும், அதன் கருவிகளும், சென்ற வருடம் ஏற்றுமதி செய்யப்பட்டுள்ளன-மேலும் 70,000த்திற்கு மேற்பட்ட ஆர்டர்கள் கைவசமுள்ளன.

இதை நீங்கள் படிக்கும்போதே, அண்மையில் தானாவில் துவக்கப்பட்ட மர்பியின் தொழிற்சாலையில் மேன் மேலும் தரமான டிரான்ஸிஸ்டர்கள் உற்பத்தியை பெருக்கத் துவங்கி விட்டது.

ஆனால், இதன் தன்மையை மதிப்பிடுவதை உங்களிடமே விட்டு விடுகிறோம். அண்மையிலுள்ள விற்பனையாளர்களிடம் சென்று இதன் ஆகர்ஷண தரத்தை ஒத்திட்டு பாருங்கள். பிறகு உண்மையான தரமான செட்டிலிருந்து கிடைக்கும் பேரானந்தத்தை உணர்வீர்கள் !

விலை: கலால் வரி உட்பட - இதர வரிகள் தனி



**மர்பி இல்லத்தை மகிழ்விக்கிறது!**

டாம். இத்தனை நாட்கள் போய் விட்டன. இன்னும் ஒருநாள்!'' என்று கெஞ்சினான். ஆனால் கராபி அன்றே பதினொரு மணிக்கு, ராகு காலத்தில் ஈன்று விட்டது.

பார்வதியம்மாள் மனம் கலங்கினாள். மேலும் புலியுடன் நடந்த யுத்தத்தில் வலது கண்ணில் நகம் பட்டோ, மரக் கிளை குத்தியோ, கராபிக்குப் பார்வை போய் விட்டது. பார்வை சம்பந்தப்பட்ட வரையில் கராபியின் உலகம் அதன் இடப்புறத்தில் தான் வியாபித்திருந்தது.

தம் இடது காது மந்தப்பட்ட பிறகு, சச்சிதானந்தர், ''என் த்வனிலோகம் என் வலதுபுறத்தில்தான்!'' என்பார். ஆகையால் மோட்டார் சாலையில் அவர் வலது ஓரத்தில் நடக்க மாட்டார்.

ராமமூர்த்தி தம் வாக்குப்படி பெரியவரின் ஆசிரமத்துக்கு வந்து, சுற்றிப் பார்த்து விட்டு, வேலாயியையும் பக்கத்துத் தோட்டக்காரனையும் கண்டு பேசி விட்டுச் செல்வது வழக்கமாயிற்று. ஒரு நாள் காலை வேலாயி, ''மாடு வரலிங்க, சாமி'' என்றாள். இருவரும் படிகள் ஏறிச் சாலைக்கு வந்தார்கள்.

அதற்குள் மாட்டிடையன் ஓடோடி வந்து, ''சாமி! என்ன சொல்லட்டும், கராபி பாறையிலே உருண்டு ரோடு ஓரத்திலே விழுந்திருச்சி. முதுகெலும்பு ஒடிஞ்சு போச்சோ என்னவோ, எழுந்து நிக்க முடியல்லேங்க'' என்றான்.

அவ்விடத்துக்குப் போய்ப் பார்த்ததும் விஷயம் விளங்கிற்று. சாலைக்கு மேலே சரிவில் சாலைக்கு இணையாக அது மேய்ந்து கொண்டிருந்தது. மேட்டுப் பக்கம் இடது கண்ணின் பார்வை; வலது புறம் பள்ளம். சரிவின் விளிம்புக்கு வந்து விட்டதைக் கராபி கவனிக்கவில்லை. அது கால் வைத்த இடம் சொல்லுமளவுக்குப் பெரிய பாறையுமல்ல. மோட்டார் ஹார்ன் அடிப்பதைக் கேட்டுத் தான் வெருண்டதோ, வேறு என்னதான் நடந்ததோ, அது சரிந்து நானூறு, ஐந்நூறு ராத்தல் கனத்துடன் பதினைந்தடி உயரத்திலிருந்து தடால் என்று விழுந்து விட்டது. பாவம்!

அதற்குள் இருட்ட ஆரம்பித்து விட்டது. மறுநாள் நான்கு ஆட்களின் உதவியைக் கொண்டு மாட்டைக் கொட்டத்தில் கொண்டு சேர்க்கலாம், யாராவது விளக்குடன் இராக் காவல் இருக்கவேண்டும் என்று தீர்மானித்து, பசுவின் மேல் ஒரு கோணியைப் போர்த்தி, இலேசாகச் சுட வைத்த நீரில் தவிடும் உப்பும் போட்டு அதன்முன்னும் வைத்து விட்டு, ராமமூர்த்தி மேலே போகும் ஒரு பஸ்ஸை நிறுத்தி அதில் ஏறிக் கொண்டு தம் வீடு சேர்ந்தார்.

மறு நாள் ராமமூர்த்தி எல்லா விவரங்களையும் கூறிச் சென்னைக்குக் கடிதம் எழுதினார். அதைத் தபாலில் சேர்த்த பிறகு சென்னையிலிருந்து அவருக்கு ஒரு கடிதம் வந்தது. பத்தாம் நாள் 'ஸத் – சித் – ஆனந்தர் சிவலோக ப்ராப்தி' அடைந்து விட்டார் போகி பண்டிகையன்று!'' என்று அதில் கண்டிருந்தது.

ராமமூர்த்தி மாடு விழுந்த இடம் சென்று பார்த்தார். பசு அங்கேயே படுத்திருந்தது. புல் கடித்துக் கொண்டும், தண்ணீர் குடித்துக் கொண்டும், சாணம் போட்டுக் கொண்டும் இருந்தது. அதன் கண்கள் அமைதியாகவும் வெகு அழகாகவும் இருந்தன. கன்று நந்தினி அருகிலேயே அது இருந்தது. வேலாயியின் ஏற்பாடு. விசாரித்ததில், நகர்த்த ஆரம்பித்ததும் கராபி கதறத் தொடங்கியது, கண்ணறாவியாக இருந்தது என்பது தெரிந்தது. தாய் கன்றுக்காகவும் கன்று தாய்க்காகவும் நெஞ்சுருகும்படி கதறியதால், வேலாயி நந்தினியைத் தாயின் பக்கத்தில், நாக்கு எட்டும் தூரத்தில் கட்டியிருந்தாள். அன்றிரவும் கணப்புடன் ஒருவர் காவல் இருப்பது என்ற ஏற்பாடு செய்யப்பட்டது; குளிரைப்




மாடி ரயில் - மூன்றாம் வகுப்பு. ஆதி காலத்தில் இந்தியாவில் B. B & C. I. ரயில்வே பயன்படுத்திய ரயில் பெட்டிகள் இப்படித்தான் இருந்தன.

ஆதாரம்: பிரீமியர் ஆட்டோமோபைல்ஸ் சஞ்சிகை



"தேன் கொட்டி விட்டது. லீவு வேண்டும்."

"லீவு யாருக்கு? உனக்கா; எனக்கா?"

போலவே காட்டு விலங்கு களும் நிலையக் கண்டு எட்டி நிற்கும்.

இவ்வாறு சில நாட்கள் கழிந்தன. யாருக்கும் என்ன செய்வதென்று விளங்கவில்லை. நல்ல காலம், அவ்விடத்தில் சாலை அகல மாக இருந்தது; மாடும் நல்ல தாரைப் பள்ளத்தில் இருந்தது. இல்லாவிட்டால் கார்டிரைவர்கள் சத்தம் போட் டிருப்பார்கள்.

கால்நடையாக அவ்வழி சென்றவர்கள் தம் தம் யோசனை கூறினார்கள்; ஒன்றுகூடச் செய்யக் கூடிய தாக இருக்கவில்லை. முனிய னும் காலையும் மாலையும் வந்து பார்த்துச் சென்றான். அவனுக்கு ஒரு யுக்தி தெரி யும்; ஆனால் அவன் அதைச் சொல்லவில்லை. அய்யாவின் பல மாடுகள் இயற்கையாகவோ விபத்தாலோ இறந்த போது அவன்தான் அவற்றைக் கடத்திச் சென்றவன். கறியும் தோலும் அவனுக்குக் கணிசமான லாபம். பல்லைக் காட்டிக் கொண்டே, "என்ன கொடுக்கட்டும், சாமி?" என்று கேட்பான். விட்டார் அரு வருப்புடன், "ஒன்றும் வேண்டாம், போ. நாலு பேருடன் வந்து அப்படியே தூக்கி எடுத்துப் போ. இங்கே துண்டு போடாதே" என்பார்கள்.

**பொ**ங்கலன்று மாலை ராமமூர்த்தியும் அவர் மனைவியும் மாட்டைப் பார்க்க வந் தார்கள். வீட்டில் பண்டிகை கொண்டாட வில்லை. ஆனால் வேலாயி தானும் இன்று மாட் டுக்கும் வைக்கட்டும் என்று கருதிப் பொங்கல் கொண்டு வந்தார்கள்.

மாட்டைச் சுற்றி ஒரு சிறு கூட்டம் கூடி யது. சாலையின் விளிம்பைத் தலையணையாகக் கொண்டு, நாக்கைத் தொங்க விட்டுக் கொண்டு, சுரபி கடைசித் தூக்கத்தில் இருந்தது. ஒருவருக்கொருவர், "அது சாவ தாகவே இருக்க வில்லையே. திடீரென்று எப்படிச் செத்தது? மருந்து. இருந்து....?" எனக் கிசுகிசுவென்று பேசிக் கொண்டார்கள்.

அந்தோணி என்னும் கிழவன், "இந்தக் குடும்பத்துக்கே இப்படியெல்லாம் சோதனை ஏற்பட்டால், நாமெல்லாம் எம்மட்டுக்கு? என் மூணு மாடும் ஒரே வாரத்திலே செத்தப்போ, அவங்க இருமா ஒரு மாடு கொடுத்தாங்க. அன்னிக்கு இரவெல்லாம் அவங்களுக்காக நான் ஜெபம் செய்தேன். மாடா கொடுத்தாங்க — பவுன் மூட்டை யில்லே தூக்கிக் கொடுத்தாங்க! அவங்க ஆசீர்வாதம், ஒரு சேதாரமில்லாம நாலு தலை முறையா விருத்தியாயிருக்க. ஒரு மந்தையே கூடிருச்சி. இல்லாட்டி நாலு பேர் நடுவிலே நான் தலை காட்டவா? அவங்க சேமமாத் திரும்பி வநததும் என் மயிலைப் பசுமேரியை அவங்களுக்குக் கொடுக்கணும்" என்று கண்ணீருடன் சொன்னான்.

வேலாயி, "பாட்டய்யா! அய்யாரு காலமாயிட்டாரு. தெரியாதா?" என்றான்.

"ஐயோ! அப்படியா? இனி அம்மா எங்கே தனியா வரப் போறாங்க? இந்த நல்ல புத்தி போன வரு ஷமே எனக்குத் தோணி யிருக்கக் கூடாதா?" என்று சொல்லி அலறினான்.

சிறிது நேரத்தில் ஓர் ஆள் முனியனுடன் வந்து சேர்ந் தான். அவனும் தன் வியப் பையும் வருத்தத்தையும் தெரிவித்தான். ராமமூர்த்தி கண்ணைத் துடைத்துக் கொண்டு, "என்ன, முனியா! இப்பவே எடுத்துக் கிட்டுப் போறயா, நாளை தானா?" என்று கேட்க, அவன், "எஜமான் உத்தர வுப்படியுங்க. சொன்னால் இப்பவே ஆள் கூட்டியாறேன்.... எதுனாச்சி யும் கொடுக்கணுமா?" என்று கேட்டான்.

ராமமூர்த்தி அருவருப்புடன், "ஒன்றும் வேண்டாம், போ!" என்றார்.

அதற்குள் ஒரு பஸ் மேல் நோக்கி வரவே கணவனும் மனைவியும் ஏறிக் கொண் டார்கள். "முனியனுக்கு மாட்டுப் பொங் கல்!" என்றாள் மனைவி, கசந்த ஹாஸ்யத் துடன். இரண்டு பர்லாங்கு சென்றதும் ஒரு குரங்குக். குடும்பம் சாலையோரச் சுவரில் உட்கார்ந்திருப்பதைக் கண்ட ராமமூர்த்தி வண்டியை நிறுத்திக் கைவசம் இருந்த பொங் கலை அவற்றுக்கும் படைத்தார்.

**கி**ரியைகளுக்காகச் சென்னை சென்ற ஓர் உறவினர் திரும்பி வந்ததும் ராமமூர்த்தி யிடம், "....பெரியப்பாவின் மரணத்தை இயற்கையின் அதிக்கம் என்று நினைத்து மனத்தைக் கல்லாக்கிக் கொண்டிருந்த பெரியம்மா சுரபியின் கஷ்டத்தைக் கேட்டு இடிந்து உட்கார்ந்து விட்டார். சுரபியின் அறிவைக் கதை கதையாகச் சொன்னார். தானங்களைப் பற்றிய சர்ச்சை வந்த போது பெரியம்மா, 'சங்கேதமாகச் செய்யுங்கோ, போதும். எத்தனையோ பசுக்கள் தானம் பண்ணியாச்சு' என்று சொல்லி விட்டார். சுரபி செத்த சங்கதி தெரிஞ்சதும், 'முனியன் தின்னுட்டுப் போறான்; அவன் பாப புண்ணி யம் அவனோடே. சுரபியின் தன்மை கடைசி வரையில் அதை விடலை, பாருங்கோ. பாலாக் கொடுத்தது கொஞ்சமா நஞ்சமா? வஞ்சனை யில்லாமே கொடுத்தது. கறக்க றப்பவே வெண்ணெய் திரண்டு மிதக்கும்! சாணமா கொடுத்தது. அதன் சாணம் எப்படி இருக்கும் தெரியுமோ, சுத்தமா, கனை கனையா, நாத்தமே கிடையாது. கடைசி யிலே ஒரு குடும்பத்தின் பசியையும் பல நாட்கள் தீர்க்கும்! தன்னையே தானம் செய்து கொண்டு விட்டது!' என்றாள்" என்று விவரித்தார்.

ராமமூர்த்தி விக்கி விக்கி அழுதார்.

உங்கள் குழந்தைக்கு
ஜலதோஷம் வரும்போது
எரிச்சலுடன் சிடுசிடுத்து அழுகிறான்,
மூச்சுவிட முடிவதில்லை,
தூங்க முடிவதில்லை.

அப்போது விக்ஸ் வேபோரப்
தாலாட்டுவதுபோல
வேலைசெய்கிறது

## விக்ஸ் வேபோரப் மூக்கு அடைப்பை உடனே போக்குகிறது. தாராளமாக மூச்சுவிட உதவுகிறது. குழந்தை சுகமடைந்து நிம்மதியாகத் தூங்குகிறது.

விக்ஸ் வேபோரப்பின் சிறப்பு, அதை ஜலதோஷம் பிடிக்கும் இடங்களான மூக்கு, தொண்டை, மார்பு, முதுகு, இங்கெல்லாம் நேரடியாகத் தடவலாம். ஜலதோஷத்தின் தொல்லைகளிலிருந்து குழந்தை உடனே நிவாரணம் பெறுகிறது. தாராளமாக மூச்சுவிடுகிறது. சுகம் அடைகிறது. விக்ஸ்வேபோரப் குணமளிப்பதன் காரணம் அது ஜலதோஷத்தை எதிர்த்து உள்ளும் புறமும் இரு வழிகளில் போராடுகிறது.

1) 
உடம்பின் மேலே

2) 
உடம்பின் உள்ளே

1) விக்ஸ் வேபோரப் ஜலதோஷத்தால் ஏற்படும் உடல்வலியைப் போக்குகிறது.

2) வேபோரப் ஆவியாக மாற்றப்படுகிறது. இந்த ஆவியில் மருந்து இருக்கிறது. ஒவ்வொரு முறை சுவாசிக்கும்போதும் இது உள்ளே ஆழச் சென்று, மூக்கு அடைப்பைப் போக்குகிறது. தொண்டை கரகரப்பை நிறுத்துகிறது. மார்பு கபத்தை நீக்குகிறது. ஜலதோஷத்தின் தொல்லைகள் மறைகின்றன.

### முக்கியமான குறிப்புகள்



விரைவாக குணம்பெற, மூக்கு, தொண்டை, மார்பு, முதுகு இங்கெல்லாம் விக்ஸ் வேபோரப்பை நன்கு தேயுங்கள்.

ஜலதோஷம் தீரும்வரை இதைத் தொடர்ந்து செய்து வரவும்.




## ஜலதோஷத்திற்கு மருந்து விக்ஸ்வேபோரப்

5219

பனிக்கட்டியிலிருந்து நெருப்பு உண்டாக்கலாம் என்று சொன்னால் நீங்கள் நம்பமாட்டீர்கள். ஆனால் அது உண்மை. பனிக்கட்டியை லென்ஸ் உருவத்தில் செதுக்கி அதன் மூலமாகச் சூரிய ஒளியை ஒன்றுசேர்த்து ஒரு குறிப்பிட்ட புள்ளியில் விழும்படி செய்து அங்கு ஒரு பஞ்சை வைத்தால் 'குபீர்' என்று தீப்பற்றிக் கொள்ளும். - தகவல்: ரமணன்

ஆதாரம்: ''விஞ்ஞானச் செய்திக் கதிர்கள்''

'சோவியத்லேப்' என்ற பத்திரிகையில், ரஷ்யர்கள் கடலினடியில் ஹோட்டல் ஒன்று கட்டப் போவதாகச் செய்தி வந்திருக்கிறது. 'கடல் பரிசு' என்ற பெயரில் சோச்சி என்ற நகரில் கடலின் அடிமட்டத்தில் கட்டப்படும் இந்த உணவு விடுதியில் 300 நாற்காலிகளுக்கான இடவசதியும், உணவு உட்கொள்ளும்போது கடலின் கீழே உள்ள சுற்றுப்புறத்தை ரசிக்கப் பெரிய கண்ணாடி ஜன்னல்களும் இருக்கும். - தகவல்: சரோஜா

### சிலந்தி வலையும் ஆசையும்

சிலந்தி தான் பின்னிய வலைக்குள்ளேயே சுற்றிக்கொண்டிருக்கிறது. அதுபோல், ஆசைகளுக்கு இணங்கியவர்கள் ஆசைகளின் வெள்ளப் போக்கிலேயே நீந்திக்



கொண்டிருக்கிறார்கள். அறிவாளிகள் இந்த ஆசை வலையை அறுத்துக் கொண்டு, கவலைகளிலிருந்தும் துக்கங்களிலிருந்தும் விடுபட்டுச் செல்கிறார்கள். -புத்தர்

அனுப்பியவர்: இரா. நி.

ஹேக் நகரில் புதிய செய்தித்தாள் ஸ்தாபனம் ஒன்றை அந்நாட்டுப் பிரதமர் திறந்து வைத்தார். திறப்பு விழா எப்படி நடந்தது? வாசல் கதவைத் திறந்து வைத்து. ஆனால் வழியை



அடைத்துச் செய்தித் தாள்களை ஒட்டி வைத்திருந்தார்கள். அவற்றைக் கிழித்துக்கொண்டு உள்ளே நுழைந்தார் பிரதமர்.
- ஹாலந்து ஹெரால்ட் - 'பாபு'

### ஏசுவின் உருவம்

ஏசு கிறிஸ்துவின் காலத்தில் அவரது சித்திரம் வரையப்படவேயில்லை. அவரது முக பாவமோ உருவமோ சிற்பமாகச் செதுக்கப்பட்டதில்லை. ஏசுவின் பல்லாயிரக்கணக்கான உருவங்கள் அவரை நேரில் பார்த்தவர்களில் ஒருவரான 'செயின்ட் பீட்டர்' என்பவரின் லேசான கோட்டுப் படம் ஒன்றை ஆதாரமாக



வைத்துக்கொண்டே நிர்மாணிக்கப்பட்டிருக்கின்றன. ஒரு கிறிஸ்தவர் 'ஏசு கிறிஸ்து எப்படி இருந்தார்?' என்று கேட்டபோது 'செயின்ட் பீட்டர்' தமது கைக்குட்டையில் வரைந்து காட்டியதாகக் கூறப்படுகிறது.

- ஆழி

ஒலியைக் கொண்டே ஒரு பாத்திரம் உடைந்ததா இல்லையா என்பதை உணர்ந்து கொள்ளலாம். அது போல,



மனிதனையும் அவன் பேச்சிலிருந்தே அறிவுடையவனா, மடையனா என்பதை அறிந்துகொள்ளலாம்.

''டெமாஸ்தனிஸ்''

அனுப்பியவர்: இரா. நி.

ராணுவச் சிப்பாய்களைக் கல்யாணம் செய்து கொள்ளும் பெண்கள் அதிர்ஷ்டக்காரர்கள்.



ஏனெனில், அந்தச் சிப்பாய்கள் கட்டளைகளுக்குக் கீழ்ப்படிந்து பழக்கப்பட்டவர்கள்.

(ஓர் ஆங்கிலப் பத்திரிகையிலிருந்து) - ஸரோ

*1911ல் நயாகரா நீர்வீழ்ச்சியில் ஒரு பீப்பாய்க்குள் உட்கார்ந்தபடி உருண்டு விழுந்து சாதனை ஏற்படுத்திய பாபிலீச் ஆறு மாதம் கழித்துத் தெருவில் நடக்கும்போது வாழைப்பழத் தோலில் வழுக்கி விழுந்து இறந்து விட்டார்!*

- மிரர் - 'பாலி'

லண்டனில் உள்ள குடும்பத் தலைவிகளைக் கண்டு நடத்திய ஓர் ஆராய்ச்சியில் வெளிப்பட்ட ஒரு ரகசியம்: அவர்கள் 57 விஷயங்களை விரும்புகிறார்களாம். 91 விஷயங்களை வெறுக்கிறார்களாம். ஒரே ஒரு விஷயம் மட்டும் இரண்டு பட்டியல்களிலும் இடம் பெறுகிறது. அந்த விஷயம் கணவன்மார்கள்!

ஆதாரம்: ''லண்டன் மெய்ல்''
தகவல்: காழி ஜெயா

# நம்பிக்கை

## வனமாலிகை

அவன் முரடன். திருடன். நெஞ்சத்தில் அச்சத்தை எழுப்பும் தோற்றம். அந்த வட்டாரத்தில் அவன் குறிப்பிடத் தகுந்த புள்ளிகளில் ஒருவன்.

அவள் கடைசி வரைக்கும் தன் பேச்சை மாற்றவோ, திருத்தவோ — யோசிக்கலாம் என்ற இடைவெளிக்கோ இடம் இல்லாமல் உறுதியாகச் சொன்னாள்.

''அவனுக்குக் கழுத்தை நீட்டுவதைவிடப் பாழுங் கிணற்றில் விழுவது எவ்வளவோ மேல்.''

''பிறவிக் குறை என்றால் மாற்ற முடியாது. இடையிலே ஏற்பட்ட குறை மாறாமலா போகும்? அதெல்லாம் பின்னால் சரியாகி விடும்.''

''வள்ளி, அவன் ஒழுங்காகக் குடும்பம் நடத்த மாட்டான். பின்னால் நீ கண்ணீர் வடிக்க வேண்டியது வரும். நல்லா யோசிச்சுப் பதில் சொல்லு.'' பெற்றவர் மனம் துடித்தது.

''என்னவோப்பா, கட்டிக்கிட்டா அவரைத்தான் கட்டிக்குவேன். இல்லேன்னு இப்படியே இருந்து விட்டுப் போறேன்'' என்றாள் வள்ளி.

''எப்படியாவது நாசமாய்ப் போய்த் தொலை.'' — பெற்றவர் பாச மிகுதியால் விரக்தியுடன் கூறினார்.

''உங்க ஆசீர்வாதமே நல்லா இருக்கே?'' என்று சிரித்தவாறு கேட்டாள் வள்ளி.

வள்ளி பேச்சிமுத்துவை இதயத்தில் ஏற்றி வைத்த நிகழ்ச்சி கண்முன் விரிந்தது.

வள்ளி அப்பனுக்கு வயலுக்குக் கஞ்சி கொடுத்து விட்டுத் திரும்பும்போது உச்சி வேளையாகி விட்டது. அந்தக் காட்டுப் பாதையில்—அதுவும் உச்சிப் பொழுதில் ஒரு காக்கையின் நிழல்கூட அங்கே தென்படாது. குறுக்கு வழியில் சீக்கிரம் வீட்டுக்கு வர நினைத்தாள் அவள் — பாதையில் நடந்து வரும்போது இரண்டு மைனர்கள் அவளை வழிமறித்தார்கள். அவர்கள் வாயிலிருந்து சாராய வாடை 'குப்'பென்று வீசியது.

வள்ளி ஆபத்தில் சிக்கிக் கொண்டாள். அவள் கற்பு அங்கே நழுவி விழ விருந்தது. அதனை அவள் காப்பாற்றிக் கொள்ளப் போராடினாள். அவள் கையில் இருந்த கஞ்சிக் கலயம் உடைந்தது. அடுத்தபடியாகப் பெண்மை அங்கே உடைபட விருந்தது. அவள் அபயக் குரல் எழுப்பினாள். அவளது குரலைக் கேட்டுத் தெய்வம் போல் தோன்றினான் பேச்சிமுத்து.



கண நேரத்தில் அவனுக்கு நிலைமை புரிந்து விட்டது. மைனர்களை விரட்டி அடித்தான். வள்ளியின் பெண்மை பத்திரமாக இருந்தது.

அந்த விநாடியே வள்ளிக்கு அவன்மீது மதிப்பு ஏற்பட்டு விட்டது.

அதன் பிறகு அவர்கள் வேண்டுமென்றே பல முறை சந்தித்துக் கொண்டார்கள். அவளைக் கண்டதும் முரடன் பேச்சிமுத்து குழந்தையாகி விடுவான். அவள் மனம் கோணாமல் நடந்து கொண்டான்.

'எனது பெண்மையைக் காப்பாற்றிய அவர் காலடியில் அதைக் காணிக்கையாக்க வேண்டும்' என்று வள்ளி முடிவு செய்து விட்டாள்.

வள்ளியின் பிடிவாதம் நிறைவேறிவிட்டது. வள்ளி — பேச்சிமுத்துவின் திருமணம் 'இனிது' நடைபெற்றது.

அவர்களின் தனிக் குடித்தனம் இனித்தது.

வீட்டினுள் செல்லும்போது செருப்பைக் கழற்றி வாசலில் வைப்பதைப் போல, பேச்சிமுத்துவும் வீட்டினுள் நுழைந்துவிட்டால் முரட்டுக் குணத்தை வெளியே நிறுத்தி விடுவான்.

'இவரை முரடன், போக்கிரி என்கிறார்களே?' என்று வியந்து போனாள் வள்ளி.

வள்ளிக்கு அவனை மிகவும் பிடித்திருந்தது. ஆனால் அவனது தொழில்....!

"உங்க பழைய தொழிலை விட்டு விட்டு, ஏதாவது வேலை செய்து பிழைக்கலாமுங்க" என்றாள் வள்ளி. அவளுக்கு மற்றப் பெண்களைப் போல் வாழ வேண்டும் என்ற ஆசை.

"வள்ளி! நான் ஒருத்தனுக்குக் கீழே வேலை செய்யறது உனக்கே நல்லா யிருக்கா? அதிலே கிடைக்கிற பிச்சைக் காசு என் செலவுக்கே போதாது. என் ராசாத்திக்கு எப்படி சந்தோஷத்தைக் கொடுக்க முடியும்?" என்றவன் பாஞ்சையோடு அவள் கரத்தைப் பற்றிக் கன்னத்தோடு வைத்துக் கொண்டான்.

தேவைக்கு அதிகமாக உள்ளவர்களிடமிருந்து தனக்குத் தேவையானதை எடுத்துக் கொள்வான் அவன். ஏழைகளின் சொத்துக்களுக்குக் காவலாளியாகவும் இருப்பான். இது வரைக்கும் அவன் எந்த வழக்குகளிலும் மாட்டிக் கொள்ளவில்லை. அவன் திருடியதாகத் தடயம்கூட இல்லை.

வள்ளியின் வயிற்றுக்கு வஞ்சனையில்லாமல் 'சம்பாதித்து'ப் போட்டான். அவர்களின் தாம்பத்திய வாழ்க்கையில் துளிக்கூட விரிசல் ஏற்படவில்லை. கணவனின் தொழில் அவள் இதயத்தில் கொத்துக் காயாகக் கனத்தது.

சில நாட்கள் இரவு நேரத்தில் திடீரென்று மறைந்து விடுவான் அவன். வள்ளி பாயில் கையை எட்டிய தூரம் வரை நீட்டிப் பார்ப்பாள். கணவன் இருக்க மாட்டான். அதற்கு மேல் அவளுக்குத் தூக்கம் ஏது? விளக்கைக் கொளுத்தி வைத்து விட்டு உட்கார்ந்து விடுவாள். இதயத்தில் குடும்ப தெய்வமும், கண்களில் நீரும் குடிகொண்டு விடும். விடியற்காலை மணி ஐந்துக்குள் திரும்பி விடுவான் அவன்.

அதன்பிறகு கொஞ்ச நேரம் அவள் பேச மாட்டாள். அவனும் ஒன்றும் நடக்காதது போல் படுத்துக் கொள்வான். தனக்குப் பக்கத்தில் பாயில் உட்கார்ந்திருக்கும் வள்ளியை அப்படியே இடுப்பில் கைகொடுத்து வளைத்துத் தன்னுடன் இழுத்துக் கொள்வான்.

அவளும் எவ்வளவோ மன்றாடிப் பார்த்து விட்டாள். அவள் விழிக் கோணங்களில் தேங்கும் நீரை விரலால் சுண்டி விட்டுக் கொண்டு, "ஏதோ பழக்க தோஷம். என்னால் வேறு தொழிலும் பார்க்க முடியாது. நீ இப்படி அழுதால் நான் எங்கேயாவது போய் விடுவேன்" என்று பயமுறுத்துவான். அதற்கு மேல் அவள் மௌனமாகி விடுவாள்.

தொழில் ரகசியங்களை மறைக்காமலே அவன் அவளிடம் சொல்லுவான். அவள் சுரத்தின்றிக் கேட்பாள்.

ஒரு வாரமாக நல்ல மழை. பேச்சிமுத்துவின் தொழிலை அது மிகவும் பாதித்தது.

அன்றைக்கு இரவு மணி மூன்றிருக்கலாம். எங்கோ போய்விட்டு வந்த பேச்சிமுத்து தன் மேல்துண்டை அவிழ்த்துக் கொட்டினான்.

ரூபாய் நோட்டுக்களும், சில்லறையும் விழுந்தன. அதைப் பார்த்த வள்ளிக்கு எப்படியோ இருந்தது. அவன் விழி மூடாமல் பார்த்தாள்.

"வள்ளி, இரண்டு நாட்களா வேட்டை எதுவும் கிடைக்கல்லே. முத்தாரம்மை இன்றைக்குப் படியளந்தாள்."

"அட, தெய்வமே!" வள்ளி வாய்விட்டு அலறி விட்டாள். அவள் இதயம் படபடத்தது.

"கோயில் காணிக்கைப் பெட்டியையா உடைச்சிங்க?"

"ம்.... அம்மனுக்கும் கொஞ்சம் போட்டு விட்டுத்தான் வந்தேன். அம்மன் இதனாலே பட்டினி ஒண்ணும் இருக்க மாட்டாள்."

"இது நல்லா இருக்கா? தெய்வ குற்றம் நம்மைச் சும்மா விடுமா?"

"பேசாமல் இரு."

வள்ளி தன்னை மறந்தாள்.

"இந்தா, பாருங்க. இந்தப் பணத்தைத் திருப்பிக் கொண்டு போய்ப் பெட்டியிலே போடுங்க."

"பைத்தியம் — தொழிலில் கிடைச்ச லாபத்தை யாராவது திருப்பிக் கொடுப்பாங்களா?"

வள்ளியின் இதயத்தில் ஆவேசம் குடி புகுந்து விட்டது.

"நான் சொல்றதைக் கேளுங்க. அம்மனுக்குப் போட்ட காணிக்கைப் பணம் நமக்கு வேண்டாம். இப்பவே கொண்டு போய்ப் பெட்டியிலே போடுங்க. இல்லே, நானாவது கொண்டு போட்டுறேன்."

அவன் வறட்டுச் சிரிப்புச் சிரித்தான்.

"சிரிக்காதீங்க. தெய்வம் இப்போ கேட்காது. நம்ம வம்சத்துக்கே அது போதும்."

"வள்ளி!"

"என்கிட்டே எதுவும் பேசாதீங்க. முதல்லே பணத்தைப் போட்டுட்டு வாங்க. அதுக்கப்புறம்தான் என்கிட்டே பேசலாம்."

பேச்சிமுத்து என்னவெல்லாமோ சமாதானம் சொல்லிப் பார்த்தான். அவள் கேட்பதாக இல்லை.

"நீங்க செய்த குற்றத்துக்குத் தண்டனையாக இந்த ஒரு ரூபாயையும் சேர்த்துப்





# எக்லா ஸ்னோ





உங்கள் சருமத்தைப் பாதுகாத்து முகத்தில் பருக்கள் வராமல் தடுக்கிறது. நாள் முழுவதும் உங்களை இளமையுடன் இருக்கச் செய்வது

எக்லா ஸ்னோ

தயாரிப்பாளர்கள் : **தி நோவா கம்பெனி**

ஆக்ரா ரோடு, பாண்டுப், பம்பாய்-78

---

# மூல நோயை

முற்றவிடாமல்
நம்பிக்கையான

## ஹெடன்ஸா

உபயோகித்து
நிவாரணம்
அடையுங்கள்;
—ரண
சிகிச்சையையும்
தடுங்கள்

---

சுகத்திலோ சுகவீனத்திலோ
பெண்கள் எப்போதும்
நம்பியிருப்பது

## லோத்ரா



ஆரோக்யத்திற்கும்
மகிழ்ச்சிக்கும்
சிறந்த டானிக்

65 ஆண்டுகட்கும் மேலாக
புகழ்பெற்றது

**கேஸரி குடீரம் (பி) லிட்.**
15, வெஸ்ட்காட் ரோடு
ராயப்பேட்டை, சென்னை-14



தமிழ்நாட்டுக்கு ஏஜண்டுகள்:
**தோராம ஜெனரல் ஸ்டோர்ஸ்**
மேலக் கோபுரத் தெரு, மதுரை

போட்டு மன்னிப்புக் கேளுங்க. விடிஞ்சதும் நாம் ரெண்டு பேரும் குளிச்சி அம்மனை வலம் வந்து தொழலாம்'' என்றாள்.

''என்னால் திருப்பிக் கொண்டு போடவே முடியாது.''

அவளும் உறுதி தளரவில்லை.

''சரி, நானே கொண்டு போய்ப் போட்டு விட்டு வர்றேன்'' என்றவள் அந்த மேல் துண்டில் எல்லாவற்றையும் பொட்டண மாகக் கட்டினாள்.

''ஏய் வள்ளி, விளையாடுறியா என்ன? இந்த இருட்டிலே நீ எப்படிப் போவாய் ?''

அவள் பதில் சொல்லாமல் இருட்டில் இறங்கி, ஊர் எல்லையில் இருக்கும் அம்மன் கோயிலை நோக்கி நடக்கத் தொடங்கினாள்.

பேச்சிமுத்துவும் தன் ஆண்மையைப் பாதி யில் விட்டுக் கொடுக்க மனமின்றி வீட்டிலே உட்கார்ந்திருந்தான்.

வள்ளி காணிக்கைப் பெட்டியைத் திறந்து பணத்தைப் போடவும், இரண்டு சிவப்புத் தொப்பிகள் அவளைச் சுற்றிக் கொள்வதும் சரியாக இருந்தது.

வள்ளியின் உடல் நடுங்கியது.

''திருட்டு ராஸ்கல், காணிக்கைப் பெட்டி யையா உடைக்கிறே ?''

'பேட்டரி லைட்' வெளிச்சத்தில் பெண் என்பது தெரிந்தது.

'' அட, பொம்புளைக்கு இவ்வளவு துணிச்சலா ?''

''இவள் பேச்சிமுத்துவோட சம்சாரம்.''

''ஓஹோ....'' ஏளனச் சிரிப்பு.

வள்ளியினால் உண்மையைக் கூற முடிய வில்லை. கணவனைக் குற்றவாளியாக்க அவள் மனம் இடங் கொடுக்கவில்லை.

''ம்... நட ஸ்டேஷனுக்கு.''

வள்ளிக்கு என்ன செய்வதென்றே புரிய வில்லை. இரு கைகளையும் தலைக்கு மேல் தூக்கி அம்மனை வணங்கிவிட்டுப் போலீஸ் நிலை யத்தை நோக்கி நடந்தாள்.

வள்ளியின் வரவை பார்த்துக் கொண் டிருந்த பேச்சிமுத்துவுக்கு இருப்புக் கொள்ள வில்லை. பொழுது செல்லச் செல்ல இதயம் 'பக் பக்'கென்று அடித்துக் கொள்ளத் தொடங்கியது.

நெஞ்சில் பயம் பாரியாகப் படர்ந்தது.

விடிய ஐந்து மணிக்கு வெளியே வந்தான்.

செய்தி அவன் காதுக்கு எட்டியதும் பதறிப் போனான் பேச்சிமுத்து. போலீஸ் நிலையத்தை நோக்கி நடந்தான்.

கணவனைக் கண்டதும் இலேசாகச் சிரித் தாள் வள்ளி. அந்தச் சிரிப்பில் சோகம் கரை கட்டி நின்றது.

''வள்ளி....''

''என்னங்க இது பச்சைக் குழந்தை மாதிரி அழுறீங்க? செய்த குற்றத்துக்குத் தண்டனை இது.''

பேச்சிமுத்துவின் வைரம் பாய்ந்த இதயம் கூட அனல் மெழுகாகி விட்டது.

'' நீங்க செய்தாலும், நான் செய்தாலும் ஒண்ணுதானே ?''

அவனால் பேச முடியவில்லை.

◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆

## நானா ஏமாறுவேன் !

ஒருவன், தான் ஒரு குதிரையை விழுங்கி விட்டது போல் ஒரு கனவு கண்டான். மறு நாளிலிருந்து, அவன் அது உண்மையென நம்பி, பைத்தியமாகி விட்டான். அவனை ஓர் ஆஸ்பத்திரிக்கு அழைத்துக் கொண்டு போனார்கள். ஆஸ்பத்திரியில் டாக்டர்கள் ஒன்று கூடித் தீர்மானித்து, ஒரு குதிரையை ஆஸ்பத்திரிக்கு அழைத்து வந்தார்கள். நோயாளிக்கு மயக்க மருந்து கொடுத்து



அவன் விழித்துக் கொள்ளும் சமயம், அவ னுக்கு அக்குதிரையைக் காண்பித்து, ''நீ விழுங்கிய குதிரையை ஆபரேஷன் செய்து எடுத்தாகி விட்டது'' என்றனர்.

அவன் மயக்கம் தெளிந்து, ''என்னையா ஏமாற்றப் பார்க்கிறீர்கள்? நான் விழுங் கியது வெள்ளைக் குதிரை அல்லவா? இது கருப்பாயிருக்கிறதே !'' என்றான்.

— கே. வி. மோகன்

◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆

''நான் உண்மையைச் சொல்லி விடு கிறேன்'' என்றான்.

''இந்தா பாருங்க, அதொண்ணும் வேண் டாம். நடக்கக் கூடியது நடந்தே தீரும்.''

''வள்ளி! இந்தத் தொழிலுக்கு இந்தக் கணமே முழுக்குப் போட்டுட்டேன்.''

''உண்மையாகவா ?''

''சத்தியமா சொல்றேன் வள்ளி. கூலி வேலை செய்தாவது கால் வயிறு கஞ்சி குடிச்சாப் போதும்.....''

''நீங்க திருந்துவீங்கன்னு, அதுக்காக இன்னும்கூடச் சிறைக்குப் போகத் தயாரா இருக்கேனுங்க.''

வள்ளியின் விழிகளில் ஆனந்தக் கண்ணீர் பெருக்கெடுத்தது. அவள் கனவு நிறைவேறி விட்டது.

சிறைக் கம்பிகளினூடே கைவிட்டு, கொண்டவளின் கண்ணீரைத் துடைத்தான் பேச்சிமுத்து.

விழிகள் மகிழ்ச்சியில் மிதந்தன.

''அம்மா, தாயே! இந்த அளவிலாவது அவர் திருந்தி விட்டாரே. அது போதுமம்மா. என்னைச் சிறைக்குப் போனவள்னு நாலு பேர் திட்டினாலும் பொறுத்துக் கொள்வேன்.'' வள்ளியின் நம்பிக்கை ஈடேறி விட்டது.

வள்ளிக்குப் பதினைந்து நாட்கள் சிறைத் தண்டனை !

பேச்சிமுத்து இப்போதெல்லாம் தினமும் கூலி வேலைக்குப் போய்க் கொண்டிருக்கிறான்.

# இன்ப வாழ்வு, இனிய குடும்பம், இந்நலமெலாம் விவசாயி முருகனுக்கு வாய்த்தது எப்படி?



## ஏராள விளைச்சல் தாராளமாக அளித்திடும் ஓர்த்திங்டன்-சிம்ப்ஸன் பம்புசெட் அளித்த வளமையிது.

**முருகன் வாழ்வில் ஈடில்லாத இன்பநாள், ஓர்த்திங்டன்-சிம்ப்ஸன் பம்புசெட் பொருத்திய அந்தநாள். குறைந்த சிலவில் நிறைந்த பயன் தரும் முதலீடு, ஓர்த்திங்டன்-சிம்ப்ஸன் பம்புசெட். பெஸ்ட் அண்ட் கம்பெனியின் ஓர் ஒப்பற்ற தயாரிப்பு அது.**

ஈடு இணையற்றது என்று புகழ் பெற்ற 'மானோபிளாக்' பம்பு செட்டுகள் உட்பட பலவகை சென்டிரிப்யூகல் பம்புகளையும் **பெஸ்ட்** அளிக்கிறது. ஓர்த்திங்டன்-சிம்ப்ஸன் பம்பு செட்டுகள் கண்டிப்பான தரக்கட்டுப்பாட்டுடன் தயாரிக்கப்படுபவை. விற்பனைக்குப் பிறகும் சேவை செய்ய, நாடெங்கும் ஏற்பாடுகள் செய்யப்பட்டுள்ளன. மேலும், தக்க பம்புகளை தேர்ந்தெடுப்பதற்கு ஆலோசனைகளையும் அளிக்கிறது **பெஸ்ட் !**

Focus-BC-193 Tam (a)






**பெஸ்ட் & கம்பெனி பிரைவேட் லிட்.**

(ஸ்தாபிதம்: 1879)
13/15 நார்த் பீச்ரோடு, சென்னை-1.

தமிழ் நாட்டில் கிளைகள்:
6/434, திருச்சிரோடு, கோயமுத்தூர்.
49-D, மதுரைரோடு, திருச்சி-1.



# சீதா கல்யாணம்

-வாதூலன்-

ஓய்வு பெற்றவர் என்.என். சர்மா. காசி, ராமேசுவரம் என்று யாத்திரை சென்று, போகிற இடத்துக்குப் புண்ணியம் சேர்க்கக் கூடாதோ? ஆனால் அவரோ எங்கும் போகாது இருந்த இடத்திலிருந்து கொண்டே புண்ணியம் சம்பாதிக்க வழி தேடினார். தற்செயலாக அவர் மூலம் முடிந்த ஒரு விவாகத்தின் பலனாக, யோசனையொன்று தோன்றிற்று. 'மாட்ரிமோனியல் பீரோ' ஆரம்பித்தார். ஆரம்பித்த வேளை சுபவேளையாக இருக்கவே 'நிலயம்' வளர்ந்தது. ஓர் அசிஸ்டெண்டாகக் கல்யாணம் அதில் சேர்ந்தான்.

கல்யாணம் பி.ஏ. இரண்டு தரம் பெயிலாக இனிமேல் படிக்க வேண்டாமென்று முடிவுக்கு வந்தவன். ஆள் பார்க்க வசீகரத் தோற்றத்துடன் இருப்பான். உதட்டுடன் எப்போதும் இணைபிரியாத மோகனப் புன்னகை. சுருள் சுருளான கேசம். உயரத்துக்கேற்ற உடற்கட்டா அல்லது உடற்கட்டுக்குத் தகுந்த உயரமா எனச் சொல்ல முடியாதபடி அவ்வளவு பொருத்தமாக இரண்டும் அமைந்திருந்தன அவனுக்கு.

காற்றாட ஒரு நாள் போய்க் கொண்டிருந்தவன் கண்களில் 'மாட்ரிமோனியல் பீரோ' பலகை தென்பட்டது. இங்கே முயற்சி செய்தாலென்ன? சட்டென்று உள்ளே நுழைந்தான்.

"யார் நீ? என்ன வேணும்? பெண்தானே? எந்த மாதிரி டைப்? பட்டதாரியான, வேலைக்குப் போகும், வீட்டில் கிடக்கும்—" என்று அவனைக் கண்டதும் சர்மா அடுக்கிக் கொண்டே போனார்.

"பெண் வேண்டாம். வேலை வேணும்" என்றான் கல்யாணம்.

கல்யாணத்தைப் பாதாதிகேசம் ஒரு முறையும், கேசாதிபாதம் இரண்டாவது முறையும் பார்த்தார். ஓர் 'அபிப்பிராயம்' விழுந்து விட்டது. "நாளையிலிருந்து சேரு!" என்றார்.

கல்யாணம் நன்றி சொல்லிவிட்டுக் கிளம்ப யத்தனித்தான்.

திடீரென்று என்ன தோன்றியதோ, ''ஒரு நிமிஷம்!'' என்று கூப்பிட்டு நிறுத்தினார் சர்மா.

''வேலையில் நீ சேரலாம். ஆனால் ஒரு கண்டிஷன்.!''

மூச்சு நின்றுப் போயிருந்தது கல்யாணத்துக்கு. 'சம்பளம் மட்டும் கிடையாது' என்று சொல்லிவிடுவாரோ மனிதர்!

''அதாவது இங்கு நிறையப் பேர் வருவார்கள். நிறைய ஜாதகங்கள் வரும். நீ யாருடனும் தனிப்பட்ட முறையில் தொடர்பு வைத்துக் கொண்டு மணம் செய்து கொள்ளக் கூடாது. சம்மதமா?''

''சரி சார்!'' என்று கல்யாணம் சம்மதித்தான். வேலை கிடைப்பதே பெரும்பாடாக இருக்கிறது. இதில் கல்யாணம் வேறேயா?

அன்று சேர்ந்தவன்தான் கல்யாணம். — எஸ். என். சர்மாவின் உதவியாளனாக. இதுதான் சாக்கு என்று எல்லா வேலைகளையும் அவன் தலையில் கட்டிவிட்டார் சர்மா. பெண்ணைப் பெற்றவர்கள், பிள்ளையின் தகப்பனார்கள், அக்காக்காரிகள், அண்ணன்மார்கள் எல்லோரும் தினம் தினம் வந்து போனார்கள். வரதட்சிணை கேட்பவர்கள், அழகை மட்டும் விரும்புகிறவர்கள், நல்ல உத்தியோகத்தை மட்டும் நாடுபவர்கள், 'சொத்துப் பசை'யைப் பார்க்கிறவர்கள், எல்லா விதமானவர்களும் அங்கு வந்தார்கள். கல்யாணத்துக்கு, வேலை சுவாரசியமாய் இருந்தது. ஆபீஸ் மாதிரி இங்கும் 'சிஸ்டம்' வைத்திருந்தார் சர்மா. அந்தந்த விண்ணப்பத்துக்குத் தகுந்த மாதிரி டக்கென்று கோப்பை எடுத்து விடலாம். சில சமயம்தான் பெயர் புதிதாக இருக்க வேண்டும் என்பது போல் வினோதமான கோரிக்கைகள் வரும்! அப்போதுதான் கல்யாணம் சிரமப்படுவான்.

கல்யாணம் மீண்டும் குறிப்புப் புத்தகத்தை எடுத்துக் கொண்டு பிருகதாம்பாளுக்குப் புதுமையான பெயர் உள்ள வரன் தேடலானான்.

வாசலில் ஏதோ ஓசை கேட்டது. கல்யாணம் எட்டிப் பார்த்தான்.

சாதாரணமாகப் பெண்ணுக்கு வரனோ, பிள்ளைக்குப் பெண்ணோ தேட வருகிறவர்கள் வயதானவர்களாகத்தான் இருப்பார்கள்.

ஆனால்—

வந்தது ஓர் இளம் பெண்!

அவள் சுவாதீனமாக நுழைந்தாள். ஹாலை ஒரு நோட்டம் விட்டாள். திருவள்ளுவர் முதல் ஜான்ஸன் வரை — பலரது திருமணப் பொன்மொழிகள் ஒரு பக்கம் ஃப்ரேம்போட்டு மாட்டப்பட்டிருந்தன. இன்னொரு புறம் ''உங்கள் தேவை எங்கள் சேவை'' ''நாங்கள் பார்க்கிறோம்; நீங்கள் தேர்ந்தெடுங்கள்''— போன்ற விளம்பர வாசகங்கள்.

''அமர்க்களமாக இருக்கிறதே!'' என்றாள் உட்கார்ந்தபடியே.

''எது? இடம்தானே? கலையாய் இருநூறு ரூபாய் விழுங்குகிறதாக்கும் மாதா மாதம்!'' என்று சொன்னான் கல்யாணம்.

''இடத்தைச் சொல்ல வில்லை. இந்த ஹாலில்...''

''மொசெய்க் போட்டதாயிற்றே ஹால்! அப்படித்தான் பளபளக்கும்.''

''நான் அதையும் சொல்லவில்லை. அங்கே பொன்மொழிகள் இருக்கிறதே. அதில் எட்டாவது இருப்பது யார் வாசகம்? கலீல் கிப்ரானுக்கு முன்னாடி?''

கல்யாணம் நோக்கினான். அவனுக்குத் தெரியவில்லை; நிச்சயமாய்த் தன்னுடையதோ, சர்மாவுடையதோ மட்டும் இல்லையென்று தெரிந்தது. ''விஷயத்துக்கு வந்தால் தேவலை. நீங்கள்...'' என்று இழுத்தான்.

''என் பெயர் சீதா. உங்கள் உதவி பெற வந்திருக்கிறேன்.''

'எஸ்' வரிசையில்? அவள் பெயரைக் குறித்துக்கொண்டு, ''முழுப் பெயர்? சீதாலக்ஷ்மி, சீதாமணி...'' என்று கேட்டான்.

''நோ நோ! வெறும் சீதாதான். வெ. சீதா!'' என்று சிரித்தாள் கலீரென்று. ''என் தகப்பனார் பெயர் வெங்கடாசலம்!''

''வயசு, படிப்பு?''

''இதெல்லாம் எதற்கு?'' என்று சீதா கேட்டாள்.

''உங்களுக்குத்தானே வரன்?'' என்று கல்யாணம் திகைத்தான்.

''ஓ...மை குட்னெஸ்!'' சீதா அமெரிக்கப் பாணியில் தோளைக் குலுக்கினாள். பிறகு சொன்னாள்: ''ஐ ஆம் சாரி. என் தமையன் கணபதிக்குப் பெண் வேணும் என்பதற்குத்தான் வந்திருக்கிறேன். முப்பத்திரண்டு வயசாகிறது. அவனுக்கேற்ற மாதிரி கண்டு பிடிப்பது சிரமமாயிருக்கிறது. இதுவரைக்கும் கிட்டத்தட்ட...''

கல்யாணம் அரை குறையாகத்தான் அவள் பேச்சைக் காதில் வாங்கிக் கொண்டான். பார்வை மட்டும் முழுமையாகச் செலுத்தினான். உருண்டையான முகம். கூர்மையான மூக்கு. எப்போதும் புன்னகையையோ, கனிவான வார்த்தைகளையோ வெளிக் கொணரத் துடிக்கும் உதடுகள், கச்சிதமான உடல்கூ..

ஹூம்ம்...

திடீரென்று ஏதோ ஒரு நினைவு வர அவன் முகம் கறுத்தது.

''பதிலே காணுமே!'' என்று கல்யாணத்தின் சிந்தனையைக் கலைத்தாள் சீதா.

''ஓ யெஸ்... இதோ!'' என்று ஒரு தாளை அவளிடம் தந்தான். ''இதில் உங்கள் தமையனைப் பற்றிய விவரங்களை எழுதிக் கீழே அவன் விரும்பும் பெண் எப்படி இருக்க வேண்டும் என்பதையும் குறித்துவிடுங்கள்.''

சீதா அவ்விதமே செய்தாள்.

தாளை வாங்கிப் பார்த்த கல்யாணம் அதில் காணப்பட்ட நிபந்தனைகளைக் கண்டு பிரமித்துப் போனான். 'பெண் ஐந்தடி நாலு அங்குலத்துக்குள் இருக்க வேண்டும். பட்டம் பெற்று, பாட்டில் தேர்ச்சி யடைந்து, ஆணுடன் சமமாகப் பழகுமளவுக்கு நாகரிகம் உள்ள — அதே சமயம் வீட்டுக்கு அடக்கமாக, சந்தர்ப்பம் வந்தால் வேலைக்குப் போகவும் தயாராக...'

கல்யாணத்துக்கே தலை சுற்றியது. இது வரை எத்தனையோ விண்ணப்பங்கள் வந்திருக்கின்றன. ஓர் அம்சம் இல்லாவிட்டால், இன்னொன்று வற்புறுத்தப்பட்டிருக்கும். முழு



## வருகவே! அன்புநெறி தருகவே!

துவேஷ இருளிடை அன்பு விளக்கேந்தி, பொய் இருளிடை சத்திய ஜோதி ஏந்தி, கள்ளக் கருமைகளிடை எளிமைத் தீபமேந்தி பாரத நாட்டில் சஞ்சரித்து வரும் எல்லைக் காந்தி, கான் அப்துல் கஃபார்கான் அவர்கள் தமிழகத்துக்கு வருகை புரிகிறார்கள். காந்தி நூற்றாண்டில் காந்தி அடிகளே நம்மிடை மீண்டும் எழுந்தருளுவதாகப் பாவித்து அந்தப் பெருந்தகையின் திருஉருவத்தை இவ்விதழ் அட்டையில் வெளியிட்டு வணங்குகிறோம்.

அம்சங்களும் ஒரேயடியாகச் சேர்ந்தது இது ஒன்றுதான்!

"ரொம்பக் கஷ்டமாக இருக்கும் போலிருக்கிறதே!" என்று வெளிப்படையாகவே சொன்னான் கல்யாணம்.

"என்ன செய்வது? அண்ணா அப்படித்தான் கண்டிஷன் போடுகிறான். அப்பாவுக்கு என்ன செய்வதென்றே தெரியவில்லை. அப்புறம் தான் உங்கள் 'பீரோ' ஞாபகம் வந்தது."

"வீ வில் ட்ரை" என்றான் கல்யாணம். "ஐந்து ரூபாய் தருகிறீர்களா?"

"எதற்கு?"

"அப்ளிகேஷன் சார்ஜ்."

சீதா கைப்பையைத் திறந்து நோட்டை எடுத்து நீட்டினாள். ஏதோ சொல்ல வாயெடுத்தாற்போலிருந்தது. சொல்லவில்லை. பின்னல் ஒயிலாக அசைந்தாட, கல்யாணத்தின் மனத்தையும் அசைத்து விட்டு வெளியேறினாள்.

கணபதியின் விவாக விஷயம்தான் கல்யாணத்துக்கு ரொம்பவும் சிரமம் தந்தது. சர்மாவும் அதிலேயே மூழ்கியிருந்தார்.

திடீரென்று நினைவு வந்தவராக "மறந்தே விட்டேனே! நேற்று நீ இல்லாதபோது ஒன்று வந்தது பார். பெயர் ஜயந்தியோ வசந்தியோ அநேகமாய் எல்லாம் ஒத்து வருமென்று நினைக்கிறேன்!" என்று கல்யாணத்திடம் சொன்னார்.

கல்யாணம் நேற்றைய தபால்களைப் பார்த்தான். குறிப்பிட்ட விண்ணப்பத்தை எடுத்தான். கூடவே, "கே. எஸ். விசுவநாதன், 'இருபை'" என்று அச்சடிக்கப்பட்ட தாள் இருந்தது. சர்மாவிடம் நீட்டி, "இதுதானே? பாருங்கள்!" என்றான்.

"இதேதான். எல்லாம் பொருத்தமாக இருக்கிறது. நான் பார்த்து விட்டேன். நீ அந்த வெங்கடாசலத்துக்கு ஃபோன் பண்ணிச் சொல்லேன்."

"இதோ! என்று கல்யாணம் டயலைச் சுழற்றினான். மறு முனையில் சீதா தான் பேசினாள். விஷயத்தைத் தெரிவித்து முடித்தவுடன் ஒரு பெரிய பாரம் இறங்கியது போல் ஆறுதலாக இருந்தது. எப்போது கணபதி கொடுத்த நிபந்தனையின்படி பெண்ணைக் கண்டு பிடித்தாயிற்றே, இனிமேல் கல்யாணம் முடிந்த மாதிரிதான் என்று அவன் திடமாக நம்பினான்.

ஆனால், அந்த நம்பிக்கைதான் மறு வாரமே சீதா கூப்பிட்டனுப்பியவுடன் எப்படிச் சரிந்தது!

முக வாட்டத்துடன் அமர்ந்திருந்தாள் சீதா. கல்யாணம் பொறுத்துப் பொறுத்துப் பார்த்தான். அவள் வாயைத் திறக்கக் காணோம்.

"இப்படி அசோகவனத்துச் சீதை மாதிரி உட்கார்ந்திருந்தால்? அவசரமாக வரச் சொன்னாயே, எதற்கு?"

சீதா மௌனமாக இருந்தாள்.

"கணபதி பெண் பார்க்கப் போனானா, இல்லையா?"

"போனான். கூடவே நானும் அப்பாவும் போயிருந்தோம்."

"என்ன ஆயிற்று?"

"ஜயந்தி பெரியவர்களையெல்லாம் நமஸ்கரித்துவிட்டு, கணபதியை நமஸ்கரிக்க வந்தபோது அவன் என் காதோடு, "என்ன இது! சிவப்பு நிறம், பருமன் கூடாது என்றெல்லாம் குறிப்பிட்டிருந்தோமே! இவள் அப்படியில்லையே." என்று சொன்னான். காதோடு சொன்னதாக அவன் நினைத்துக் கொண்டானே தவிர, எல்லாருக்கும் அது தெளிவாகக் கேட்டது.

பெண்ணைப் பெற்றவர், கணபதியைப் பெற்றவரைக் கடுமையாகப் பார்த்தார். "என்ன வந்துவிட்டது இவனுக்கு!" என்று அப்பாவும் தடுமாறித்தான் போனார்.

"அதற்குத்தான் என்னைக் கூப்பிட்டாயாக்கும் குழப்பத்தைப் போக்க?" என்றான் கல்யாணம்.

"ஆமாம். அதை மட்டும் கண்டுபிடித்து விட்டால் அப்புறம் நம்..."

"சீதா" என்று ஆர்வத்துடன் அவள் கையைப் பற்றிய கல்யாணம், "நான் அதிர்ஷ்டசாலி" என்றான். உடனேயே "நான் துரதிர்ஷ்டசாலி!" என்று முடித்தான்.

"என்ன இது! முன்னுக்குப்பின் முரணாக."

"அப்படியாகி விட்டது" என்ற கல்யாணம், தான் வேலையில் சேரும்போது எஸ்.

என். சர்மா இட்ட நிபந்தனையை விளக்கமாகச் சொன்னான்.

"ஓஹோ" — சீதாவின் மனம் யோசிக்கலாயிற்று.

எஸ். என். சர்மா 'அப்ளிகேஷன் ஆஃப் மாத்மாடிக்ஸ்' என்ற புத்தகத்தில் ஆழ்ந்திருந்தார்.

"யார் இங்கே சர்மா என்பது?" என்று கேட்டபடியே ஒருவர் நுழைந்தார்.

"என்னைப் பார்த்திரா விட்டாலும் தெரிந்து கொண்டிருப்பீர்கள்!" என்று அவர் ஒரு கார்டை எடுத்து வீசினார்.

'கே. எஸ். விசுவநாதன், திருவை' என்ற விலாசத்தைப் பார்த்ததுமே சர்மாவின் மனத்தில் ஏதோ ஒன்று அரித்தது. எப்போதோ கேட்ட பெயராக இருக்கிறதே? ஆ... அந்தக் கஷ்டமான கேஸ்... கணபதிக்குப் பார்த்த பெண்ணின் தகப்பனார்!

"உட்காருங்கள்; உட்காருங்கள்!" என்று வரவேற்று உபசரித்தார் சர்மா. "பின்னே வந்து பார்த்தாயிற்று? முகூர்த்தம் எப்போ? இன்விடேஷன் கொடுக்க...."

"இன்விடேஷனா? நாசமாய்ப் போயிற்று. 'பெட்டிஷன்'தான் கொடுக்கணும் புகார் செய்து" என்று சர்மாவை முடிக்க விடாமல் சீறினார். தொடர்ந்து கணபதி பெண் பார்க்க வந்தபோது நடந்து கொண்ட விதத்தை விவரித்தார்.

வாஸ்தவத்திலேயே சர்மாவுக்குத் தூக்கி வாரிப் போட்டது. இதுவரைக்கும் எத்தனையோ பிள்ளைகளையும் பெண்களையும் பார்த்துக் கொடுத்திருக்கிறார். இம்மாதிரி யாரும் புகார் செய்ததில்லையே?

"ஸாரி. ஏதாவது தவறு நேர்ந்திருக்கும். விசாரித்துப் பார்க்கிறேன்" என்று சொல்லிப் பார்த்தார் சர்மா.

"யூ கான்ட் ஸாடிஸ்ஃபை மீ! இது பத்தி அந்த வெங்கடாசலம் தம் கைப்பட ஒரு கடிதம் எழுதி மன்னிப்புக் கேட்க வேண்டும். சொல்லிவிட்டேன். இல்லா விட்டால் அவர் பெயரையும் உம்ம 'பீரோ'வையும் சந்திக்கு இழுத்துவிடுவேன்!" பதிலுக்குக் காத்திராமல் திரும்பிப் போனார் அவர்.

'இதேதடா வம்பாக வந்து சேர்ந்தது' என்று சர்மா அயர்ந்து போனார். யோசித்தார். வெங்கடாசலத்தைக் கூப்பிட்டார் போனில்.

"யெஸ். வெங்கடாசலம் ஸ்பீக்கிங்!" என்று பதில் வந்தது.

"நான்தான் சர்மா பேசறேன். ஆமாம், மாட்ரிமோனியல் பீரோ சர்மாதான். வந்து அன்றைக்குப் பெண் பார்க்கப் போனீர்களே, ஏதோ அசம்பாவிதம் நடந்ததாமே? அந்த விசுவநாதன் 'கம்ப்ளெண்ட்' செய்துவிட்டுப் போனார் கொஞ்சம் முன்னாடி."

"கம்ப்ளெண்ட் என்றால் பயந்து விடுவேனா என்ன?" என்றார் வெங்கடாசலம் அலட்சியமாக. "எப்போது பெண்ணைப் பெற்றுப் பிள்ளைகளுக்கெல்லாம் காண்பிக்கத் தயாராய் இருக்கிறார்களோ, அப்போது அவர்கள் எதற்கும் தயாராக இருக்கவேண்டும்! என்ன ஆகிவிட்டது பிரமாதமாய்? பெண் பிடிக்கவில்லை என்பதை வெளிப்படையாகவே காண்பித்துக் கொண்டான் கணபதி. இதிலே என்ன தப்பு? நீர் 'சஜெஸ்ட்' செய்த பெண் என்பதால் மணந்தே தீரவேண்டும் என்று கட்டாயமா என்ன?"

"நோ, நோ" என்றார் சர்மா. "இல்லே. அவர் ரொம்ப வருத்தப்படுகிறார். ஒன்றுமில்லே. ஒரு சின்ன கடிதாக மன்னிப்பு..."

"மன்னிப்பாவது? எதற்கு? யார்? யாருக்கு?" என்று கேள்விகளை அடுக்கிக் கொண்டே போனார் வெங்கடாசலம். "நான் எதற்கும் தயாரில்லே. அவரால் செய்ய முடிந்ததைச் செய்யட்டும். என் பெயரை மட்டும் இழுத்தாரோ அப்புறம் தெரியும் சேதி? உம்ம நிலையத்தைப் பற்றிக் கண்டபடி பிரசாரம் செய்து விடுவேன்!"

போன் சர்மாவையுமறியாமல் நழுவி விழுந்தது.

கல்யாணம் அசையாமல் உட்கார்ந்திருந்தான் பத்து நிமிடங்களுக்கு மேலாக. சர்மா ஏதாவது பேசுவாரோ என்று காத்திருந்தான். பேச்சே காணோம். மூச்சாவது இருக்கிறதா என்ற சந்தேகமும் உதித்தது!

"சார்" என்றான்.

"இரு. இது என்ன மாசம்? 1968 ஆகஸ்ட். என்னுடைய இருபத்தி ஐந்து வருட சர்வீஸ் மாதமாடிக்ஸ் லெக்சரராக, அப்புறம் இந்த ஸ்தாபனத்தில் ஓர் ஐந்து வருஷங்கள். இது வரை இதுமாதிரி அதிர்ச்சி ஏற்பட்டதில்லே."

"எது? விசுவநாதன் பயமுறுத்தல்தானே? என்ன செய்துவிட முடியும் அவரால்?"

"என்னவா? நம்ம பெயர் கெட்டுவிடும். ஓர் உத்தமமான காரியத்துக்கு முடிவு வந்து விடும்! என்னால் நினைத்துக்கூடப் பார்க்க முடியவில்லையே!" என்றார் சர்மா.

கல்யாணம் மௌனமாக இருந்தான்.

சர்மா திடீரென்று கல்யாணத்தின் கையைப் பிடித்துக் கொண்டார். "எப்படியாவது 'நம்ம பெயர் கெடாதபடி பார்த்துக் கொள்ள வேண்டியது உன் பொறுப்பு. நீ என்ன செய்வாயோ, எனக்குத் தெரியாது."



"இதென்ன! முன்னும் பின்னும் தலையணையைக் கட்டிண்டு...?"
"எலெக்ட்ரிக் டிரெயினில் ஆபீசுக்கு முழுசா போய்ச்சேர வேண்டாமா?"



"ஏண்டா உனக்கும் ஒரு பெண்ணுக்கும் ரயிலில் காதல் ஏற்பட்டுப் பாதி வழியில் முறிந்துவிட்டது என்றாயே! காதல் முழுமையாக நிறைவேற என்ன தடை?"
"என்னிடம் டிக்கெட் இல்லாததால் பாதி வழியிலேயே என்னை இறக்கி விட்டார் டிக்கெட் பரிசோதகர்!"

''ஆகட்டும் ஸார்!'' என்று வாக்களித்தான் கல்யாணம்.

மறுநாள்.

''வழி கண்டுபிடித்தாயிற்று. முடிவுதான்'' என்று இழுத்தான் கல்யாணம்.

''பரவாயில்லே. 'அப்ரோச்' சரியாக இருந்தால் ஆன்ஸரைப் பற்றிக் கவலைப்பட வேண்டியதில்லை. நான் 'மாத்ஸ்' லெக்சரராக இருந்தபோது வழிக்குத்தான் 'மார்க்' தருவேன்!''

கல்யாணம் தொண்டையைக் கனைத்து விட்டுக் கொண்டு ஆரம்பித்தான். ''சீதாவின் தமையன் கணபதிக்கு வனஜா என்று ஒருத்தியின் மீது காதல். ஆனால் வனஜா ஏழைக் குடும்பத்தைச் சேர்ந்தவள். பைசா வரதட்சிணை தர முடியாத ஸ்திதி. ஆனால் வேங்கடாசலம் பிள்ளைக்கு வரும் வரதட்சிணையைக் கொண்டுதான் சீதாவுக்குக் கல்யாணம் செய்ய வேண்டுமென்று எண்ணியிருந்தார். அது கணபதிக்கே தெரியுமாதலால் வேணுமென்றே கஷ்டமான நிபந்தனை போட்டுக் கொண்டிருந்தான். இது சீதாவுக்கும் பெற்றோர்களுக்கும் அப்புறம்தான் தெரிந்தது. சீதா எப்படியோ சிபாரிசு செய்து கணபதியின் காதல் நிறைவேற வேங்கடாசலத்தை ஒப்புக்கொள்ளும்படி செய்துவிட்டாள். ஆனால் அவர் ஒரு நிபந்தனை போட்டார். அதாவது சீதாவை மணம் செய்து கொள்ளப் போகிறவன் வரதட்சிணை கேளாதவனாக இருக்க வேண்டுமாம்! அது மாதிரி முடித்துத் தந்தால் நாம் சொல்கிறபடி என்ன வேணுமானாலும் செய்யத் தயார்! எப்படி சார் இது முடியும்? நமக்கு வர 'அப்ளிகேஷன்' தான் ஆயிரக்கணக்கில் கேட்பதாக இருக்கிறதே!''

''ம்...'' சர்மா யோசித்தார். கொஞ்ச நேரம் கழித்து, ''நமக்கு வரும் பிள்ளைகள் ஆயிரக் கணக்கில் கேட்பவர்கள்தான். ஆனால் நம்மோடே இருக்கும் பிள்ளை?'' என்று ஒரு கேள்வி போட்டார்.

''யார்?''

''கல்யாணம்!''

''யாருக்கு?''

''உனக்கேதான்!'' என்றார் சர்மா. ''நீயே மணந்துகொள் சீதாவை. வரதட்சிணை ஏதாவது உனக்கு வேணுமானால் நான் தந்து விடுகிறேன்!''

''வந்து... நீங்கள் போட்ட கண்டிஷன்... நான் சேர்ந்த சமயம் சொன்னீர்களே—''

''விடப்பா அதை! சேர்ந்த உடனேயே நீ யாரையாவது காதலித்து வெளியே போய் விட்டால் எனக்குச் சிரமமாயிருக்குமே என்றுதான் அதுபோல் விதி போட்டேன். மேலும் எதற்கும் 'எக்ஸெப்ஷன்' என்று ஒன்றிருக்கிறதே!''

கல்யாணம் புன்னகை செய்தான்.

கணபதியின் கல்யாண ரிசப்ஷன் நடந்து கொண்டிருந்தது. முக்கிய ஆளாக, அங்குமிங்கும் ஓடியாடி உபசரித்துப் பணி புரிந்தவன் கல்யாணம்தான்.

'இவனை எங்கேயோ பார்த்த மாதிரி இருக்கிறதே' என்று ஒருமுகமாக வந்திருந்தவர் எல்லாரும் கல்யாணத்தைக் கண்டு யோசனை செய்தார்கள்.

''அந்தப் பிள்ளை கல்யாணம்! மாட்ரிமோனியல் பீரோ சர்மாவின் செல்லப் பிள்ளை! சீக்கிரமே எங்கள் வீட்டுக்கு வரப் போகும் மாப்பிள்ளை!'' என்று அலுக்காமல் சலிக்காமல் சொல்லிக் கொண்டிருந்தார் வேங்கடாசலம்.

இரவு எட்டு மணிக்குப் பிறகுதான் சீதாவுடன் பேசச் சந்தர்ப்பம் கிடைத்தது கல்யாணத்துக்கு.

''அப்பா உங்களுக்கு வரதட்சிணை எவ்வளவு தெரியுமா தரப் போகிறார்?'' என்று சீதா ஆரம்பித்தாள்.

''உஷ்! சர்மாவின் காதில் விழப் போகிறது!'' என்று சிரித்துக் கொண்டே எச்சரித்தான் கல்யாணம். ''வரதட்சிணை கேட்காத பிள்ளை கிடைத்தால்தான் நாம் சொல்கிறபடி வேங்கடாசலம் கேட்பார் என்ற கொக்கியைப் போட்டல்லவா மடக்கியிருக்கிறோம் சர்மாவை! என்ன இருந்தாலும் உன் 'ஐடியா' பிரமாதம்!''

சீதா கலகலவென்று சிரித்தாள். ''பாவம், நீங்களும்தான் சிரமம் எடுத்துக் கொண்டீர்கள், அண்ணாவின் காதலைக் கண்டு பிடித்துச் சொல்ல!''

''ஆமாம்? நமக்கு நாள் பார்த்தாச்சா?''

''ஓ! ஆவணி 25!''

''அதாவது செப்டம்பர் இரண்டாவது வாரம்! ஹும்.... இன்னும் அறுபது நாட்கள்! இப்போதுதானே 'இடைத்தேர்தல்' மாதிரி கணபதியின் மாரேஜ் முடிந்திருக்கிறது!'' என்று விளையாட்டாகப் பெருமூச்சு விட்டான் கல்யாணம்.

ஆவணி மாதம் 25ந் தேதி சீதாவுக்கும் கல்யாணத்துக்கும் விவாகம் நடைபெற்றது. திருமணத்தின் போது, இன்னும் பத்து வயது குறைந்தவராக உற்சாகத்துடன் சர்மா நடமாடினார். அவருடைய ஸ்தாபனத்தின் மூலம் தம்பதி ஆனவர்களில் பலர், சீதா கல்யாணத்துக்கு வந்திருந்தனர்!

கல்யாணம் சீதாவை மணந்து கொண்டவுடன் ஸ்தாபனத்தையும் விரிவுபடுத்தினான். விவாகம் ஆகுமுன் ஆண் — பெண் இருவரது அபிலாஷைகள், லட்சியங்கள், நோக்குகள் ஆகியவற்றை ஒரு பேட்டி மூலம் தெரிந்து கொள்ளும் முறையொன்றை வகுத்தான். பெண்களுக்காகத் தனியே ஒரு பகுதி செயல்படவும் ஏற்பாடு செய்தான்; அதற்குத் தலைவியாக இருந்தவள் சீதாதான் என்று சொல்லத் தேவையில்லை.

அடுத்த ஆண்டு ஆண் குழந்தைக்குத் தந்தையானான் கல்யாணம். வெறும் விவாகத்துக்கு மட்டும் சேவை புரிந்து வந்த ஸ்தாபனம் 'குழந்தை வளர்ப்பு', 'குடும்பப் பாங்கு' போன்ற பிரச்னைகளுக்கு யோசனை சொல்லுமளவுக்கு வளர்ந்தது. 'சீதா கல்யாண சேவா சதன்' தென்னிந்தியாவில் மிகப் பிரபலம் அடைந்தது.

எஸ். என். சர்மா கௌரவ ஆலோசகராக இருந்து வந்தார். மாதமாடிக்ஸை வைத்துத் திருமணத்துக்கு யோசனைகள் சொன்னவர், இப்போது திருமணத்தையும் தம்பதிகளையும் அடிப்படையாகக் கொண்டு கணிதத்தில் ஆராய்ச்சி செய்வதாகக் கேள்வி.

# சவுக்கடி

ரா.வீ.



'உலகத்தில்தான் எத்தனை மதங்கள்! எத்தனை தரிசன சாஸ்திரங்கள்? ஒன்றுக்கொன்று முரணாக அல்லவா இருக்கின்றன! இவற்றையெல்லாம் ஒன்றுசேர வைப்பது எப்படி?'

போஜ மன்னரது மனத்தில் இப்படி ஓர் எண்ணம் எழுந்தது. உடனே சிறைத் தலைவருக்கு ஓர் உத்தரவு போட்டார்.

''ஆறு தரிசன சாஸ்திர பண்டிதர்களையும் சிறைப்படுத்துங்கள்! அவர்கள் ஒருமுகமான கருத்தை ஏற்கும்வரை அவர்களுக்கு உணவுகூட அளிக்காதீர்கள்!''

அரச ஆணையை மீற இயலுமா? உடனே அது செயலாக்கப்பட்டது. தத்துவ ஞானிகள் அனைவருமே யோசனையில் ஆழ்ந்தார்கள்.

அரசியலைப் போலவே அவரவர்க்கும் ஓர் உடன்பாடு இருந்தது. கொள்கையை விட்டால் அப்புறம் தர்சனங்களும் தத்துவங்களும் ஏது? எனவே, உணவின்றி உயிரை விடச் சித்தமானார்கள்.

குஜராத்தைச் சேர்ந்த சூராசாரியர் என்னும் பண்டிதர் அப்போது தாரா நகரத்துக்கு வந்திருந்தார். ராஜா போஜரின் இச் செய்கையைக் கேள்விப்பட்டதும், அரசரைக் காண அரண்மனைக்குச் சென்றார். மன்னரை விளித்து, ''மன்னர் மன்னா! நான் திரும்பவும் குஜராத்துக்குப் பயணமாகிக் கொண்டிருக்கிறேன். போனதும் எனது ஆசாரியார் தாரா நகரத்தைப் பற்றிக் கேட்பார். தாங்கள் ஏதாவது குறிப்பாக விவரம் கூறினால், அதிகார பூர்வமாக அவருக்கு எடுத்துக் கூற முடியும்!'' என்றார்.

போஜ மன்னருக்கு மகிழ்ச்சி கரைகொள்ளவில்லை. அவர் தம் நகரத்தின் எழில் அமைப்பைப்பற்றி இறுமாப்பு கொண்டிருந்தார். அதை எடுத்துக் கூறலானார்: ''முனிவரே! இந்த நகரத்தில் எண்பத்து நான்கு அரசமாளிகைகள் இருக்கின்றன. எண்பத்துநான்கு கடை வீதிகள் இருக்கின்றன. ஒவ்வொரு கடைத் தெருவிலும் இருபத்துநான்கு பல பொருட் கடைகள் உள்ளன. அவற்றின் அமைப்பு, அணி ஆகியவை ஒவ்வொன்றும் தனித்தன்மை வாய்ந்தவை; சிறப்பானவை. ஒன்றுக்கொன்று தூக்கியடிக்கக் கூடியவை. இது போன்ற கடைத்தெருக்கள் வேறு எந்த நகரத்திலும் இல்லை; துருவித் துருவித் தேடினாலும் இது போன்ற கடைத் தெருக்கள் உலகத்தில் எந்தப் பகுதியிலுமே காணக் கிடைக்காது'' என்றார்.

சூராசாரியார் இடைவெட்டி, ''மன்னா! ஒரு நகரத்துக்கு இத்தனை கடைத் தெருக்களும், அந்தக் கடைத் தெருக்களில் ஒவ்வொன்றுக்கும் இருபத்து நான்கு வீதம் பல பொருட் கடைகளும் தேவைதானா? எல்லாக் கடைகளையும் ஒன்றாக்கி, எல்லாப் பொருட்களும் ஒரே இடத்தில் கிடைக்குமாறு செய்ய முடியுமானால் எவ்வளவு நன்றாக இருக்கும்? வாடிக்கைக்காரர்கள் எந்தப் பொருளையும் ஒரே இடத்தில் பெறலாம். ஒரு பொருளைத் தேடி நகரமெங்கும் சுற்றி அலைய வேண்டிய அவசியம் அவர்களுக்கு நேராமலிருக்கும்!'' என்றார்.

இப்படி ஒரு சிறப்பங்காடி யோசனையைச் சூராச்சாரியரின் வாய்மொழியாகக் கேட்டு, இளநகையோடு கூறினார் அரசர்:

''முனி சிரேஷ்டரே! அதெப்படி முடியும்? இந்தக் கற்பனை நடைமுறைக்கு ஒவ்வாது. எல்லாப் பொருள்களையும் ஒரே இடத்தில்தான் பெற வேண்டுமானால் எத்தனை கூட்டம் கூடிவிடும்? ஒரே சிறப்பங்காடி மக்களின் தேவைக்கேற்பச் செயல்படுவதென்றால், எத்தனை கஷ்டமாகி விடும், தெரியுமா? கூட்டத்தைச் சரிப்படுத்தப் பெரும் பாதுகாவல் படை போட வேண்டியிருக்கும். ஒழுங்குமுறையைக் கடைப்பிடிக்க என்னவெல்லாமோ முயற்சிகளை மேற்கொள்ளவேண்டியிருக்கும். தாங்கள் தவத்தோர் ஆனதால் வியாபாரச் சிரமங்கள் உங்களுக்குத் தெரியவில்லை.''

சூராச்சாரியார் தம் பேச்சுக்கு ஒரு திருப்பம் கொடுத்துக் கூறினார்: ''அரசே! நானும் ஒன்றுகூற விரும்புகிறேன். தாங்களோ அரசர். ஆளும் முறையை மட்டுமே அறிந்தவர். தர்சன சாஸ்திரம், தர்ம சாஸ்திரம் இவற்றின் சூட்சமங்கள் தங்களுக்குத் தெரியாது. கடைகளும் கடைத் தெருக்களும் தங்கள் ஆட்சிக்கு உட்பட்டவை. தங்களால் அவற்றையே ஒன்று கூட்ட முடியாது என்றால் மக்களின் உள்ளங்களில் எழும் உணர்ச்சிப் பெருக்கை எப்படி ஒன்றாக்க முடியும்? அப்படியே ஒன்றாக்கி விடுவதாகவே வைத்துக் கொள்வோம். பல தர்மங்களையும் கடைப்பிடிக்கும் மக்கள் ஒன்றாகி ஒரே இடத்தில் கூடத் தொடங்கினால்...கற்பனை செய்து பாருங்கள். லட்சக் கணக்கான, கோடிக்கணக்கான மக்களின் கனவை அறிந்து தேவையறிந்து, அவர்கள் வேண்டுகோள்களை நிறைவேற்றி வைக்க முடியுமா?''

சூராச்சாரியாரின் இந்தப் பேச்சைக் கேட்ட போஜ மன்னருக்குச் சுளீர் என்று தம் மூளையில் யாரோ சவுக்கால் அடிப்பது போலத் தோன்றியது. தமது அரைகுறைச் சிந்தனைக்காக வருந்தினார். உடனே எல்லா அறிஞர்களையும் சிறையிலிருந்து விடுவிக்குமாறு உத்தரவிட்டார்.

வேற்றுமையிலும் ஒற்றுமை கண்டு அதை உலகுக்கும் எடுத்துக் காட்டிச் சிறப்புப் பணிபுரியும் தரிசன தர்ம சாஸ்திரங்கள் அன்று முதல் போஜ மன்னர் ஆட்சியில் வளம்பெற்று வாழ்வுக்கு வழிகாட்டியாக அமைந்தன.




இன்று நாட்டிலே அரசினரின் ஆதரவில் வெகு வேகமாகப் பரவியுள்ள பரிசுச் சீட்டு மோகம் தற்சமயம் ஆரம்பப் பாடசாலைகளில் பயின்று வரும் மாணவ, மாணவியரிடமும் பரவி வருகின்றது. நல்லொழுக்கத்தைப் போதிக்க வேண்டிய ஆசிரிய சமுதாயம் மூலமாக மாணவர்களுக்கு ஒரு பரிசுச் சீட்டு மூன்று பைசா விதம் விற்கப்படுகின்றது. வாரத்தில் ஒரு நாள் சீட்டுகள் குலுக்கப்பட்டு ரூபாய் இரண்டு முதல் மூன்று வரை பரிசாக அளிக்கப்படுகின்றது. இந்தப் பரிசுச் சீட்டு தற்சமயம் அரக்கோணம் நகரில் உள்ள ஒரு பாடசாலையில் நடைபெற்று வருகின்றது. இத்தகைய சீட்டுகளின் மூலமாகப் பிள்ளைகளுக்குப் படிப்பில் கவனம் குறைந்து அதற்கு மாறாகச் சூதாட்ட மோகம் அவர்களைக் கெட வைக்கிறது. கையிலே காசு கிடைக்காத சமயம் சில பிள்ளைகள் திருடவும் ஆரம்பிக்கிறார்கள். நாட்டின் செல்வங்களாகிய மாணவ மாணவிகள் இத்தகைய தீய வழிகளில் ஈடுபடாமல் இருக்கப் பெற்றோர்களும் மற்றும் கல்வி அதிகாரிகளும் தகுந்த நடவடிக்கை எடுக்க வேண்டுமாய்க் கேட்டுக் கொள்கிறேன். இத்துடன் இரண்டு சீட்டுக்களையும் தங்கள் பார்வைக்கு இணைத்துள்ளேன்.

ரேணிகுண்டா
10—12—69 வெ. சுந்தரமூர்த்தி

பஸ்ஸில் பிரயாணம் செய்யும்போது எஸ். ஐ. இ. டி., பெண்கள் கல்லூரி நிறுத்தத்தில் ஒரு வாலிபர் பஸ்ஸில் ஏறினார். பஸ் கிளம்பினவுடன் அவர் கையிலிருந்த ஒரு நோட்டுப் புத்தகம் நழுவிப் பாதையில் விழுந்து விட்டது. கண்டக்டர் பல முறை விசில் அடித்தும் டிரைவர் வண்டியை நிறுத்தாமல் அடுத்த நிறுத்தமான தேனாம்பேட்டை போலீஸ் ஸ்டேஷன் அருகேதான் வண்டியை நிறுத்தினார். உடனே அந்த வாலிபர் கீழே இறங்கி ஓடினார். அவருக்கு அந்த நோட்டுப் புத்தகம் கிடைத்ததோ இல்லையோ? மனிதாபிமானம் கொஞ்சம் கூட இல்லாதவராக அந்த டிரைவர் ஏன் நடந்து கொள்ள வேண்டும்?

கிண்டி.
15—11—69 பத்மாமணி

★ தற்கால மாணவர்களிடையே காணப்படும் ஒழுக்கக் கட்டுப்பாட்டுக் குறைவுக்குப் பல காரணங்கள் கூறப்படுகின்றன. அவற்றில் மிக முக்கியமானதும், அடிப்படையானதுமான ஒன்று, பள்ளிகளில் நீதி போதனைக்குப் போதிய அளவு முக்கியத்துவம் கொடுக்கப்படவில்லை என்பது.

எல்லாப் பள்ளிகளிலும் நீதி போதனைக்கு ஒரு ''பீரியட்'' ஒதுக்கப்பட்டுள்ளது. ஆனால் உண்மையில் அப்பீரியட்டில், நீதி போதனைக்குப் பதிலாக பரீட்சைக்கு உரிய ''முக்கிய'' பாடங்களே போதிக்கப்படுகின்றன. இதற்குக் காரணம், நீதி போதனை பரீட்சைக்கு உரிய பாடமல்ல; மேலும் இப்பாடத்துக்குச் சரிவரப் பாடத்திட்டம் இல்லை. பரீட்சைக்கு இல்லாத பாடங்களான கைத்தொழில், தேகப்பயிற்சி, நீதி போதனை போன்றவைகளுக்குப் பல பள்ளிகளில் முக்கிய இடம் அளிக்கப்படுவதில்லை.

நீதி போதனைக்கு ஒரு ''பீரியட்'' ஒதுக்குவது மட்டும் போதாது. இதற்கு அகில இந்திய அடிப்படையில் ஒரு பாடத் திட்டமே வகுக்க வேண்டும்.

நெய்வேலி—3
24—11—69 ராதா ராமன்

★ இக்குறிப்பிட்ட கடிதம் ரூ. 15 பரிசு பெறுகிறது.

அரசினர் நடத்தும் எல்லாப் பயிற்சிகளுக்கும் உதவிப் பணம் ரூபாய் நாற்பது முதல் எண்பது வரை அளிக்கப்பட்டு வருகிறது. புதியதாகத் தொடங்கப்படும் பயிற்சிகளுக்கெல்லாம் ரூபாய் அறுபது வழங்கப்பட்டு வருகின்றது. ஆனால் எல்லாராலும் புனிதமான தொழில் என்று வர்ணிக்கப்படும் 'பள்ளிக்கூட உபாத்தியாயர்' வேலைக்கான பயிற்சியின் போது மட்டும் மிகவும் குறைந்த ரூபாயான பதினெட்டு மட்டுமே வழங்கப்பட்டு வருகிறது. வெள்ளைக்காரர்கள் ஆண்ட காலத்திலும் தரப்பட்டு வந்த பணம் இதுவே. அதன்பின் இன்றுவரை இத்தொகையில் எவ்வித மாற்றமும் இல்லை.

ஸ்ரீவல்லிக்கோட்டை
1-11-69 வைனதேய ஆத்ரேயன்

''சூதாடுதல் மனிதனின் பலவீனம்'' என்று கூறிய அண்ணலின் நூற்றாண்டு விழா பொருட்காட்சி இங்கே நடந்தது. உள்ளே நுழைந்தேன். ஒன்பது ஸ்டால்களில் ஆறில் சூதாட்டம். ஒவ்வொரு இடத்திலும் எத்தனை கூட்டம்!

ஹிம்சையின் சின்னமான பட்டு எடுக்கும் கண்காட்சி ஏன்? கதரை வைத்தால் என்ன?

வகுப்போ சமயமோ தாக்கப்படக்கூடாது என்ற அண்ணலின் விழாவில் ஒரு வகுப்பாரைத் தாக்கும் சித்திர நாடகம்.

உரக்க அழ இடமில்லை: மௌனமாக அழுதேன்.

அருவங்காடு.
25-10-69 ''உண்மை விளம்பி''

Printed & published by R. Ananthanarayanan on behalf of Messrs. Bharathan Publications Private Limited at Kalki Press, Chetput, Madras-31
Managing Editor: T. Sadasivam

REGISTERED No. M. 4992
Registered as a Newspaper in Ceylon